கவிமணி

# தேசிகவிநாயகம் பிள்ளை

---

பண்டித சு. வே. நடராசன்
மதுரைத் தொழிலாளர் நலவுரிமைக் கழக உயர்நிலைப் பள்ளி,
மதுரை.

---

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்

மதுரை :: திருநெல்வேலி :: சென்னை

பதிப்புரிமை] 1955 [விலை அணு 13.

திருத்திய பதிப்பு—1955

# முன்னுரை

கவிமணியவர்களைப் பற்றிப் பல்லாண்டுகளாக நம் தமிழகம் நன்கு அறியும். ஆயினும் அவரது வாழ்க்கை வரலாற்றை அறிய விழைந்தும், போதிய நூல்கள் இல்லாமையால், நன்கு அறிந்து கொள்ள இயலவில்லை. இந்நிலையில் இந் நூற்றாண்டின் தலை சிறந்த கவிஞர் பெருமானாகத் திகழ்ந்த கவிமணியவர்களைப் பற்றிப் பல நூல்கள் வெளி வருவது இன்றியமையாதது அன்றோ!

நான் அறிந்த வரையில், கவிமணியவர்களைப் பற்றி வெளி வந்துள்ள நூல்கள் சிலவற்றுள்ளும், கவிமணியின் வாழ்க்கை முற்றும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது என்று கூறுதல் இயலாது. ஆகவே, கவிஞரைப் பற்றி எத்துணை நூல்கள் வெளி வருகின்றனவோ, அத்துணை அளவு அவரது வாழ்க்கை விளக்கமுறும் என்பதில் ஐயமில்லை.

தமிழ் மக்களும், சிறப்பாகக் கவிமணியின் கவிதை மலர்களுடன் எப்பொழுதும் தொடர்பு கொண்டிருக்கும் மாணவ மாணவிகளும் கவிமணியின் அன்பு, வாழ்க்கை, சிறந்த பண்பாடு, உயரிய கருத்துக்கள், இடையறு உழைப்பு, அரிய தமிழ்ப்பணி இவைகளை ஓரளவு அறிந்து கொள்ள வேண்டுமென்று விரும்பலானேன். அதன் பயனாகவே இச் சிறு நூல் வெளிவருகின்றது. இதனைத் தமிழகம் உவந்து வரவேற்கும் என்று நம்புகின்றேன்.

எனது வேண்டுகோட்கு இணங்கி இந் நூலுக்கு அணிந்துரை வரைந்து உதவிய பெருந்தகையாகிய தமிழ்ப் பேராசிரியர் ஆ. கார்மேகக் கோனார் அவர்கட்கு என் உளமார்ந்த நன்றி உரித்தாகும்.

மதுரை
18—9—'55

ஆசிரியன்.

# அணிந்துரை

மதுரைத் தொழிலாளர் நலவுரிமைக் கழக உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் திரு. பண்டித, சு. வே. நடராச பிள்ளையவர்கள் எழுதியுள்ள "கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை" என்னும் புத்தகத்தைப் படித்துப் பார்த்தேன்.

இந்நூலாசிரியர், கவிமணி அவர்கள் பிறந்த நாட்டவராய், அடிக்கடி அவர்களை அணுகிப் பழகி, அவர்களது வாழ்க்கை முறையினையும் குணநலங்களையும், புலமையினையும் நன்கு அறிந்தவராதலின், கவிமணியின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை நன்முறையில் நிரல்பட இந்நூலுள் அமைத்து விளக்கியுள்ளார்.

இந்நூலின் நடை, கருத்தமைதியினை நன்கு தெளிவுறுத்தும் சொற்றொடர்களோடு, இனிமையும், எளிமையும் அமைந்து விளங்குவது இப்புத்தகத்தின் சிறப்புக்களில் சிறப்பியல்பாகவுள்ளது.

அண்மையில் நற்பண்பினாலும், சிறந்த புலமையினாலும், சீரிய ஒழுக்கத்தினாலும் தமிழகமெங்கும் புகழ் ஒளி பரப்பி நிலவியிருந்த கவிமணியின் இ வ் வ ர லா று, மாணவர்க்குப் பெரிதும் பயன்பட்டு அவர்களது வாழ்க்கை நெறிக்கு ஒரு நந்தா விளக்காக விளங்குமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

இப்பெரியார் வாழ்க்கை நலத்தைவடித்துத் தந்த ஆசிரியர் திறன் பெரிதும் பாராட்டற்பாலது.

இங்ஙனம்

**கார்மேகக் கோன்,**

18-9-'55 தமிழ்ப் பேராசிரியர், மதுரை.

---

எக்ஸெல்ஸியர் பவர் பிரஸ், மதுரை:—55.

# பொருளடக்கம்

கவிமணி

# தேசிகவிநாயகம் பிள்ளை

---

## 1. பிறப்பு

### நாஞ்சில் நாடு

பண்டைத் தமிழகத்தில் முதன்மை பெற்று இலங்கிய சேர நாட்டில், இன்றுந் தமிழ் மொழி வழங்கப்படும் ஒரு சிறு நிலப்பரப்பாக விளங்குவது நாஞ்சில் நாடு. இஃது அகத்தீசுவரம், தோவாளை என்னும் இரண்டு தாலூகாக்களையும் உள்ளடக்கித் தெற்கே குமரிக் கடலையும், வடக்கே பொதிய மலையையும் எல்லையாகப் பெற்று இலங்குவதாகும். இந் நாட்டின் இயற்கை வனப்புக் காண்போர் கண்ணையும், கருத்தையும் கவரும்வண்ணம் வியக்கத்தக்க முறையில் அமைந்துள்ளது. எங்கு நோக்கினும், பச்சைப் பசேலென்று காணப்படும் பசும் புற்றரைகள்—பச்சைப் படாம் போர்த்தாற் போன்று பரந்து தோன்றும் கழனிகள்—மலர்களைத் தெளித்துச் செழிப்புடன் வளர்ந்து நிற்கும் தென்னை, புன்னை, மா, பலா முதலிய மரங்கள்—அலரி, பிச்சி, மல்லிகை, முல்லை, மருக்கொழுந்து முதலிய மலர்ச் செடிகள்—வள்ளிக்கொடிகள் முதலியன இயற்கை அழகுடன் காட்சியளிக்

கின்றன. சலசலவென்ற ஓசையைச் செய்யும் சிறிய நீரோடைகளும், வளைந்தோடும் சிற்றாறுகளும், மகிழ்ச்சி மிகுதியால் செந்தேன் துளித்து நகை முகங் காட்டும் செந்தாமரைத் தடங்களும், மஞ்சு தோய்ந் துலவும் மாமலைகளும் எங்கணுஞ் செறிந்து பேரெழில் பெற்று விளங்குகின்றன.

இந் நாட்டில், உழுதுண்டு வாழும் வேளாண் வாழ்க்கையே நடைபெறுகின்றது. இங்குச் செல்வர் களும், வரையாது வழங்கும் வள்ளல்களும், அறிஞர் களும், அரசியல் உணர்வினர்களும் குழுமி வாழ்கின் றார்கள். இந் நாடு, சதாவதானி செய்குத்தம்பிப் பாவ லர், தசாவதானி ஆறுமுகம் பிள்ளை, அறிஞர் சிதம்பரம் பிள்ளை, இசைச் செல்வர் இலக்குமண பிள்ளை, கே. என். சிவராஜ பிள்ளை, இராவ் சாகிப் எஸ். வையாபுரிப் பிள்ளை முதலிய பெருமக்கள் தோன் றிய தனிப்பெருந் தாயகமாக விளங்குகின்றது. நகைச் சுவை யரசு என். எஸ். கிருஷ்ணன், நாடகக் கலையரசு டி. கே. சண்முகம் ஆகியவர்களும் இந் நாட்டினரே ஆவர்.

இந் நாட்டின் தலைநகராகத் திகழ்வது நாகர் கோவில். இதன் வடபால் ஏறத்தாழ இரண்டு கல் தொலைவில் அமைந்திருப்பது 'புத்தேரி' என்னுஞ் சிற்றூர். இஃது காண்போருக்கு இயற்கைத் தேவி யின் ஆடரங்காகவே காட்சி நல்கும் என்பதில் ஐய மில்லை. இச் சிற்றூரிலிருந்தே கவிமணி தேசிக விநா யகம் பிள்ளை அருந்தமிழ் அன்னைக்குப் பெரும் பணி பல புரிந்தார்; தமது எளிய வாழ்க்கையையும் நடாத்

தினர். கவிமணி அவர்களால் இன்று புத்தேரி பெயர் பெற்று இலங்குகின்றது. "பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறுதல் இயல்பன்றோ!"

## பிறப்பு

கவிமணி புத்தேரியில் தமது வாழ்க்கையை நடாத்தியதால், அதுவே அவரது பிறப்பிடம் என்று எவரும் எளிதில் நினைந்துவிடுவர். ஆயின், அஃது அவரது பிறப்பிடமன்று. * சுசீந்திரத்திற்கு அண்மையில் உள்ள 'தேரூர்' என்னும் சிற்றூரே அவரது பிறப்பிடமாகும். இங்கு அவர் கி. பி. 1867-ம் ஆண்டு ஆடித் திங்கள் 14-ம் நாள் பிறந்தார். கவிமணி, தாம் பிறந்த இந்தச் சிற்றூரை என்றும் மறந்ததே இல்லை. "ஒருவன் தான் பிறந்த நாட்டை அல்லது நகரத்தை அல்லது ஊரை மறப்பது என்றால், அது தன்னைப் பெற்ற அன்னையரை மறப்பது போலாகும்" என்று அவர் அடிக்கடி கூறுதல் வழக்கம்.

"பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே"

என்று பாரதியாரும் அருளிப் போந்தார்.

கவிமணியின் பிறப்பிடமாகிய தேரூர் ஒரு சிற்றூரே ஆயினும், அஃது கனிகளைத் தருகின்ற பல மரங்களும், உழவர்கள் உழுது நாற்று நடுகின்ற பல பழனங்களும், வாச மலர்ப் பொய்கைகளும் எங்கும் சூழ்ந்து, இயற்கை யெழில் காட்டி விளங்குவதாகும்.

*நாகர்கோவிலுக்குத் தென் கிழக்கே 3 கல் தொலைவில் கன்னியாகுமரி செல்லும் வழியில் உள்ளது.

## மரபு

நாஞ்சில் நாட்டில் தொன்றுதொட்டே சீருஞ் சிறப்பும் பெற்ற மிகப் பெரிய மரபில், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை பிறந்தார். அன்னாரின் மரபில் தமிழ்ப் புலவர்களும், தமிழன்பு பூண்ட பேரறிஞர்களும் தோன்றிச் செந்தமிழ்ப் பயிரை முறையாக வளம்பெற வளர்த்தனர். கவிமணியின் பாட்டனாராகிய மாணிக்க வாசகம் பிள்ளை, 'காரியந்தாதி' என்னும் நூலை இயற்றிப் புகழ் படைத்த சிறந்த தமிழ்ப் புலவர் ஆவர். அவரது மாதுலர், கம்ப ராமாயணச் சொற்பொழிவுகள் ஆற்றுவதில் வல்லுநராகத் திகழ்ந்த பாலசுப்பிரமணிய பிள்ளை என்பவர். கவிமணியின் மைத்துனராகிய சங்கரநாராயணபிள்ளையும் சிறந்த கம்ப ராமாயணப் பயிற்சியுடையவர்.

## பெற்றோர்

தேசிக விநாயகம் பிள்ளையின் தந்தையார் பெயர் சிவதாணு பிள்ளை என்பது. இப் பெரியார் பைந் தமிழுக்கு உருகும் நெஞ்சம் படைத்தவர்; தமிழ்ப் புலவர்களையும், தமிழறிஞர்களையும் இன்சொற் கூறி அன்போடு வரவேற்கும் பண்பும் படைத்தவர்; அவர்களைத் தமது இல்லத்திற்கு அழைத்துச் சென்று, அறுசுவை கலந்த உணவளித்து உள்ளம் மகிழ்பவர்; வருவிருந்து ஓம்பி வாழும் பெருங் குணம் உடையவர். இவர் நாஞ்சில் நாட்டில் முதன் முதலில் ஆங்கிலம் பயின்ற மிகச் சிலருள் ஒருவராவர். இவர் அரசாங்கத் தொழிலில்

அமர்ந்திருந்தவர்; அழகிய பாண்டியபுரத்திலுள்ள உப்புப் பண்டசாலையிலும் திறம்படத்தொழில் புரிந்து சிறப்புற வாழ்க்கை நடத்தியவர்.

கவிமணியின் அன்னையார் பெயர் ஆதிலட்சுமி என்பதாம். இந்த அம்மையார், நாகைப்பட்டினத்தில் கப்பல் வாணிகஞ் செய்து வந்த மாணிக்க வாசகம் பிள்ளை என்பவருக்கு அருமந்த புதல்வியராகத் தோன்றியவர். மாணிக்கவாசகம் பிள்ளைக்குத் தொழிலில் பெருங் கெடுதி ஏற்படவே, அவர் நாகைப்பட்டினத்தினின்றும் தமது சொந்த நாடான நாஞ்சில்நாடு திரும்பலானார். ஈண்டு எய்திய பின்னரே, சிவதாணு பிள்ளைக்கு ஆதிலட்சுமி அம்மையார் மணஞ்செய்து கொடுக்கப்பட்டார். மேற் கூறப்பட்டவைகளிலிருந்து, பரம்பரையே பைந்தமிழ் வளர்த்து வந்த ஒரு பெரும் மரபில் தோன்றியவர் நமது கவிமணி என்பது புலனாகும்.

## வளர்ப்பு

கவிமணியை அவரது பெற்றோர் மிக்க அன்பு பாராட்டிச் சிறப்புடன் வளர்த்து வரலாயினர். அவரோடு உடன் பிறந்தவர்களாக வேறு ஒருவரும் இல்லை. எனவே, அவர் குலத்தைத் தழைவிக்கும் குலக் கொழுந்தாக விளங்கினார். ஆகையால் அவர்கள், அவரை 'ஒரு குலத்துக்கு ஒரு மைந்தன்' என்று கருதி நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ப்பாராயினர். கவிமணியும் இளமதி போன்று எழில் கனிந்து, பொலிவுடன் வளர்ந்து வரலானார்.

---

## 2. கல்வி

### இளமை

ஒவ்வொருவரின் வாழ்க்கை வரலாற்றிலும் அவ ரவரின் இளமைப் பருவம் மிக்க சிறப்புப் பெற்றதாகும். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்னும் முது மொழிக்கு இணங்க, ஒருவரின் பிற்கால வாழ்வின் அறிகுறிகள் அன்னாரின் இளமைப் பருவத்திலேயே அமைந்து காணப்படும். கவிமணியின் இளமைப் பரு வமும் இன்றியமையாச் சிறப்புடையதாகும் என்று கூறுவது புனைந்துரை ஆகாது. அவர், பிற்காலத்தில் சிறந்த அறிஞராகவும், கவிஞராகவும் திகழ்வதற்கு ஏற்ற அறிகுறிகள் அன்னவரின் இளமைப் பருவத் திலேயே தென்பட்டன. அன்னாரின் இளமைப் பருவ நிகழ்ச்சிகள் படிப்போர்க்கு இன்பம் பயப்பதோடு, ஊன்றி நோக்குதற்கும் உரியனவாகும். விளையாடல் களிலும், சிறு குறும்புகளிலும் கவிமணியவர்களின் கல்விப் பெருக்கும், கவிதைத் தன்மையும், அன்பு, அருள், அடக்கம், ஒடுக்கம் முதலிய குணநலன்களும் புலப்படலாயின.

### வியப்பு

தேசிக விநாயகம் பிள்ளை, இளம் பருவத்தில் உரிய காலத்தில் பள்ளிக்கு அனுப்பப்படலானார். அவர், உள் ளூரிலிருந்த தொடக்கப் பள்ளியில் தமது படிப்பைத் தொடங்கினார். ஆயின், முதன் முதலில் வண்டமிழ்

மொழியைக் கற்கும் வாய்ப்பு அவருக்குக் கிடைக்க வில்லை; மலையாள மொழியையே கற்றார். மலையாள மொழியைப் பயின்ற ஒருவர், தமிழ்க் "கவிமணி" ஆகிவிட்டார் என்றால், அது வியப்பைத் தருகின்றது அன்றோ! செந்தமிழ்ப் பயிரை வளர்த்து வந்த அவரது மரபுதான் தேசிக விநாயகம் பிள்ளை அவர்களைத் தமிழ்க் 'கவிமணி' ஆக்கியதேயன்றிப் பிறிதில்லை என்னலாம்.

கவிமணி படிப்பைத் தொடங்கும் பொழுது, அவருக்குத் தமது தாய்மொழியைக் கற்கும் வாய்ப்பு ஏற்படவில்லை என்று கண்டோம். இதற்குச் சிறந்த காரணம் என்ன என்பதனை ஈண்டுக் காண்போம். அக் காலத்தில் நாஞ்சில் நாட்டில் தமிழர்கட்குத் தாய் மொழி பயிற்றும் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் மிகுதி யாகக் காணப்படவில்லை. ஓரிரண்டு பள்ளிக்கூடங் கள் மட்டுமே இருந்தனவென்று இன்றும் பேசப் பட்டு வருகின்றது. இதற்கு மாறாக எங்கும் மலையா ளப் பள்ளிக்கூடங்களே நிரம்பிக் காணப்படலாயின. எனவே, தமிழர்களும் அப்பொழுது மலையாள மொழி பயிலும் நிலைமையே ஏற்பட்டிருந்தது. இக்காரணத் தால், பிள்ளையவர்களும் மலையாள மொழியையே முதன் முதலில் பள்ளிக்கூடத்தில் பயின்று வரலானார். பின்னர் வீட்டிலும், விளையாடும் பொழுதும், தமிழன் னையை மறவாத தமிழ் மகனார் அருந் தமிழ் மொழியை விரும்பிக் கற்றார். ஆயினும், அவர் தமிழ் மொழியைக் கற்ற வாற்றைப் பற்றி அறிந்துகொள்ளும் வேட்கை ஒவ்வொருவரின் உள்ளத்திலும் எழுவது இயல்பாகும்.

## வாணன் திட்டு

தேரூரில் மருங்கெல்லாம் தண்ணீரால் சூழப்பட்ட சிறிய திட்டு ஒன்று உண்டு. அதற்கு 'வாணன் திட்டு' என்பது பெயர். கவிமணியின் வாழ்க்கையில் இவ் வாணன் திட்டு, மிக்க சிறப்புப் பெற்ற ஒன்றாகும். அவர் கவிமணியாக விளங்குவதற்கு இத்திட்டே ஏது வாக இருந்தது என்பதை அறியும்பொழுது, நாம் பெருமிதம் அடையாமல் இருக்க வியலுமா?

சிறு வயதில் பிள்ளையவர்கள், தமது தோழர் களோடு இத் திட்டிற்குச் சென்று விளையாடி மகிழ்வது வழக்கம். பள்ளி முடிந்த பின்புள்ள மாலைக் காலங் களிலும், காலை வேளைகளிலும், ஓய்வு நாட்களிலும், அவர் இங்குச் சென்று விளையாடி மகிழ்வார். அவர் விளையாடல்களில் எத்துணை விருப்பத்தைச் செலுத்தி னாரோ, அதைவிடப் பன்மடங்கு விருப்பத்தையும், ஊக்கத்தையும் பள்ளிக்கூடத்தில் கற்கும் கல்வியிலும் காட்டி வரலானார். பிள்ளையவர்களின் விளையாடல்கள் அன்னாரின் பள்ளிப் படிப்பிற்கு எத்தகைய இடையூ றும் விளைவிக்கவில்லை.

## சிறு குறும்பு

இத் திட்டில் திருவாவடுதுறை, தருமபுர ஆதீனங் களைச் சேர்ந்த பல மடங்கள் இருந்து வரலாயின. அவைகளில், அந்த அந்த ஆதீனங்களைச் சார்ந்த தமிழ்ப் பெரும் புலவர்கள் வந்து உறைவது வழக்க மாகும். சிற்சில அமயங்களில் சில போலித் துறவி

களும் அங்கு வந்து தங்குவதுண்டு. போலித் துறவிகள் என்று கண்டால், பிள்ளையவர்கள் தமது நண்பர்களோடு சேர்ந்து, அவர்களைத் துரத்திவிடுவதில் பங்கு கொள்ளத் தவறுவதில்லை.

## சாந்தலிங்கத் தம்பிரான்

ஒரு தடவை திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த சாந்தலிங்கத் தம்பிரான் என்னும் புலவர் பெருமான், ஈண்டுப் போந்து உறைந்து வரலானர். இவர், தமிழில் மிக்க புலமையும், பொறையும், நிறையும், அன்பும், அடக்கமும் ஆகிய பெருங் குணங்கள் அமையப் பெற்றவர். பிள்ளையவர்கள் தமது தோழர்களோடு இத் தம்பிரான்பாற் சென்று உரையாடினர். அவ் வமயம் கவிமணி, அவரது அன்புக் கயிற்றால் பிணிக்கப்பட்டார். ஆகவே, அவர் அடிக்கடி தம்பிரானிடஞ் சென்று, உரையாடி இன்புற்று வருவாராயினர். தம்பிரானும், பிள்ளையவர்களின் களங்கமில்லா உள்ளத்தாலும், அன்பு கனிந்த சொற்களாலும் ஈர்க்கப்பட்டார்.

## தமிழ்ப் பயிற்சி

தம்பிரானிடம் பிள்ளையவர்களின் உள்ளம் காந்தம் போல் இழுக்கப்பட்டதால், அவர் நாடோறும் பள்ளிமுடிந்து வந்தபின்பு, தம்பிரானிடஞ் சென்று தமிழ் நூல்களை முறையாகப் பயின்றார். வீட்டில் அவர் தமது தந்தையாரிடம் சிறிது தமிழ்க் கற்றுக்கொண்டது இப் படிப்பிற்கு மிக்க உதவியாக இருந்தது. தம்பி

ரான் இலக்கிய இலக்கணங்களில் வல்லவர்; அவை களைப் பிறருக்கு எடுத்துரைப்பதிலும் ஆற்றல் வாய்ந்த வர். அவர் பாடஞ் சொல்லும் முறை பிள்ளையவர்கள் விரும்பிக் கற்பதற்கு ஏற்றதாக இருந்தது. எனவே தேவாரம், திருவாசகம், அருட்பா முதலிய பல நூல் களைக் கவிமணி விரைவில் கற்றுணர்ந்து கொண்டார். இவ்வாறு, இளமையில் மலையாள மொழியைப் பள்ளிக் கூடத்திலும், அமிழ்தினும் இனிய செந்தமிழ் மொழியை வாணன் திட்டு மடத்திலும் பயின்று வரலானார்.

## உயர்நிலைப் பள்ளிப்படிப்பு

அவர் தொடக்கப் பள்ளிப் படிப்பை முடித்ததும், கோட்டாற்றிலுள்ள ஆங்கிலப் பள்ளிக்கு அனுப்பப் பட்டனர். இப்பொழுது அவருக்கு வயது பத்து. இவ் வமயத்தில் கவிமணியின் முழுப் பொறுப்பையும் அவரது அன்பு சான்ற அன்னையரே ஏற்று நடத்தும் நிலையில், அவரது அருமைத் தந்தையார் உயிர் துறந் தார். தந்தையை இழந்த கவிமணி, தேரூரிலிருந்து மெல்லிய அடி நோக நடந்து வந்து படிக்கலாயினர்; ஆண்டுதோறும் தேர்வில் தேர்ச்சியும் பெற்றனர். விரைவில் ஆங்கிலப் படிப்பை முடித்துவிட்டு, அர சாங்க அலுவலில் அமர வேண்டுமென்பதுவே அப் பொழுது அவருக்கிருந்த பெரு விருப்பம். ஏனெனில், அக்காலத்தில் ஆங்கிலம் கற்றவர்களும், அரசாங்க அலுவலில் அமர்ந்தவர்களும் பெருமை உடையவர் களாக எண்ணப்பட்டார்கள். இவ் வேட்கை கவி மணியையும் விட்டபாடில்லை. ஆயினும், அவர் அதற்கு

அடிமையாகி அதனில் அழுந்தி வருந்தவில்லை. இதனை அவரது பிற்கால வாழ்க்கை நன்கு விளக்கிக் காட்டும்.

## நினைவாற்றல்

கவிமணி இளம் பருவத்திலேயே கற்க வேண்டுவனவற்றை வெறுப்பின்றிக் கற்கலானார்; பாக்களையும் கருத்தூன்றிக் கேட்டு அவைகளை எளிதில் மனத்தில் நிலைநிறுத்தினார். அவர் மிக்க நினைவாற்றல் உடையவர்; எழுந்து நடக்க இயலாதிருந்த கிழப்பருவத்துங்கூடக் கல்வெட்டுக்களிலுள்ள சொற்றொடர்களை அப்படியே ஒப்பிக்கும் நினைவு வன்மை படைத்தவராகவே காணப்பட்டார். இளமைப் பருவத்தில் பிள்ளையவர்கட்கிருந்த நினை வாற்றலை விளக்கும் நிகழ்ச்சி ஒன்று இங்குக் குறிக்கத்தகும்.

ஒருநாள் வாணன் திட்டு மடத்தில் அப்பம், வடை முதலியன வழங்கப்பட்டன. ஆயின், அவைகளைப் பெற்றுக் கொள்வதில் விதியொன்று கையாளப் படலாயிற்று. மடத்திற்குரிய தலைவர் தேவாரப்பாடல் ஒன்றைப் படிப்பார்; பின்னர் மாணவர்களில் ஒருவர் இரண்டாவது முறையாகப் படித்தல் வேண்டும். மூன்றாவது முறையும் தலைவர் படிப்பார். பின்னர் அப்பாடலை யார் பாராமற் சொல்கின்றார்களோ, அவர்களே அந்த அப்பமும் வடையும் பெற்றுக்கொள்வதற்கு உரிமை உடையவராவர்.

இதனில் ஒவ்வொரு தேவாரப் பாடலையும் பிள்ளையவர்கள் முதன் முதலில் பிழையின்றிச் சொல்லலானார். எனவே வடையும், அப்பமும் அவர் முன் வந்து

குவியலாயின. இஃது ஒரு சிறிய நிகழ்ச்சியேயாயினும், பிள்ளையவர்களின் நினைவாற்றலை அறிதற்குச் சாலவும் பயன்படுகின்றது. இத்தகைய நினைவாற்றலே கவிமணியின் ஆராய்ச்சிக்கு உறுதுணை புரிந்தது. ஆராய்ச்சி செய்பவர்க்கு நினைவாற்றல் நன்கு அமைந்திருத்தல் வேண்டும். இல்லையேல், அவர்கள் தங்கள் ஆராய்ச்சியிற் பெரிதும் இடர்ப்பாடெய்துவர் என்பது திண்ணம். கவிமணியோ, ஆராய்ச்சி நிகழ்த்துவதில் அவ்வளவு வருத்தம் உற்றவர் அல்லர். அதனைப் பொழுது போக்காகக் கொண்டிருந்ததாகவே தென்படுகின்றது. இதற்குக் காரணம், இளமைப் பருவத்தில் அவரிடம் காணப்பட்ட நினைவாற்றலே ஆகும்.

## கல்லூரிப் படிப்பு

கற்றலில் வெறுப்பின்மையும், மிக்க நினைவாற்றலும் உடைய ஒருவர், விரைவில் ஆங்கில உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்துவிட முடியும் அல்லவா? பிள்ளையவர்களும் விரைவில் உயர்நிலைப் பள்ளியின் இறுதி நிலை வகுப்பில் தேர்ச்சி பெற்றுக் கல்லூரியிற் சேரலாயினர். ஆயினும், பிள்ளையவர்கள் தமது கல்லூரி வாழ்க்கையில் வெற்றி காண இயலவில்லை. அவர் கல்லூரியில் ஓராண்டு மட்டுமே பயிற்சி பெறலாயினர். இரண்டாவது ஆண்டுப் படிப்பை இடையிலே நிறுத்திவிட வேண்டியதாயிற்று. கவிமணியின் கல்லூரிப் படிப்பு வெற்றி பெற்றிருக்குமாயின், அவர் தமிழன்னைக்குத் தொண்டு புரிந்திருப்பார் என்று எண்ணுவதிற் பெரிதும் ஐயமே ஏற்படுகின்றது. இது கருதிப் போலும், இறை அருள் விளையாடல் இவ்வாறுக்கியது!

---

# 3. ஆசிரியத் தொழில்

## திருமணம்

கல்லூரிப் படிப்பை நிறுத்தியதும், அவர் தமது இருபத்தைந்தாவது வயதில், உமையம்மையார் என்னும் பூங்கொடியை மணம் புரிந்து கொண்டார். இந்த பண்புமிக்க அம்மையார், புத்தேரியில் உயர்குடியில் பிறந்த பெண்கள் திலகம். இவ் வம்மையாருடன் பிள்ளையவர்கள் தமது இல்வாழ்க்கையை இனிது நடாத்தலானர்.

## இல்வாழ்க்கை

அவர்கள் வாழ்க்கை செவ்வனே நடைபெறலாயிற்று. அவர்களிடம் கருத்து வேறுபாடே இல்லை; இருவரும் தத்தமக்குரிய பொறுப்புக்களை உணர்ந்து நடந்துகொண்டார்கள் என்றே கூறல் வேண்டும். கவிமணியும், பெண்களுக்கு வழங்கும் உரிமைகளில் எவைகளையும் குறைவுபடுத்தாமல், இல்லக் கிழத்திக்கு எல்லா உரிமைகளையும் வழங்கியிருந்தார். "பெண்களின் உரிமைகள்" என்னும் கவிதையைத் தீட்டிய கவிஞர், தமது மனைக்கிழத்திக்குரிய உரிமைகளை எவ்வாறு வழங்காமலிருக்க இயலும்? எல்லா உரிமைகளும் வழங்கப்பட்டிருந்ததால், அம்மையாருக்கும், இல்வாழ்க்கை ஓர் அடிமை வாழ்க்கையாகத் தோன்றவே இல்லை.

## தொடக்கப்பள்ளி ஆசிரியர்

அரசாங்கத் தொழிலில் அமர வேண்டும் என்று இருந்த பிள்ளையவர்களின் விருப்பம், இப்பொழுது முற்றுப் பெறுவதாயிற்று. அவர் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் பயின்று தேர்ச்சி பெற்று, 1901-ம் ஆண்டு கோட்டாற்றிலுள்ள தொடக்கப் பள்ளியில் ஆசிரியத் தொழிலில் ஈடுபடலானார்.

ஒரு நல்லாசிரியருக்கு உரிய அருங்குணங்கள் அனைத்தும் அவர்பால் காணப்படலாயின. பிள்ளையவர்கள் மாணவர்களிடம் காட்டிய அன்பும், பாடஞ் சொல்லும் முறையும் அவர்களுக்குப் பெரிதும் இன்பத்தை விளைவிக்கலாயின. இளம் மாணவர்கட்குப் பாடஞ் சொல்வது, ஒரு சிலருக்கு இன்பமாகத் தோன்றாது. அம் மாணவர்களின் இளமைக் குறும்பு அவர்கட்குப் பெருந் தொல்லையை விளைப்பதால், அவர்கள் பெரிதும் வெறுப்பர். எனினும் பிள்ளை யவர்கள், இளஞ்சிறார்களின் இளமைக் குறும்புகள் அனைத்தையும் சிறுபிள்ளை விளையாட்டாகவே கொள்ளலாயினர். அவைகளால் அவர் ஒரு சிறிதும் மனம் சலித்தவரும் அல்லர். அக் குறும்புகளிலிருந்து மாணவர்களிடம் தோன்றிய அறிவு நுட்பத்தை வியந்து வியந்து கொண்டாடினர்; அவர்கட்குப் பாடஞ் சொல்வதிலும் பெருமிதம் அடைந்தார்; அவர்களுக்குப் பயிற்றுவிப்பதற்காகவே, சைக்கிள், கோழி, நாய், கிளி முதலிய குழந்தைப் பாடல்களை இயற்றி, அவைகளை இன்பத்தோடு பயிற்றுவித்தார். மாணவர்களும், பிள்ளையவர்

களிடம் மிக்க அன்பு பாராட்டி அடக்கத்தோடும், பணிவோடும் நடந்து கொண்டனர்.

## ஆசிரியப் பயிற்சிப் பள்ளி ஆசிரியர்

தூய்மையான அத்துறையில் பிள்ளையவர்கள், ஊக்கமுடன் உழைத்து ஆக்க வேலைகள் பல புரியலா னார். அவர் தமது கடமைகளிற் சிறிதும் பிறழ்ந்ததே இல்லை. அவரிடம் காணப்பட்ட குழந்தை உள்ளமும், நல்லுழைப்பும் அவருக்கு மேலும் மேலும் உயர்ச் சியை நல்கின. பிள்ளையவர்கள் அங்கிருந்து விரை வில் மாற்றப்பட்டு, ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் ஆசிரியத் தொழிலை ஏற்றுப் பணி புரியத் தொடங்கி னார்.

## தமிழ் விரிவுரையாளர்

இதன் பின் பிள்ளை யவர்கட்கு மகாராசா பெண் கள் உயர்நிலைப் பள்ளியில், தமிழாசிரியர் வேலை அளிக்கப்படலாயிற்று. பின்பு, மகளிர் கல்லூரித் 'தமிழ் விரிவுரையாளர்' பதவியும் அளிக்கப்பட்டது. இப் பதவியையும் பிள்ளையவர்கள் மனமுவந்து ஏற்றுக் கொண்டனர். இப் பதவியை ஏற்று நடத்தும் பட்டங் கள் ஒன்றும் பிள்ளையவர்கட்கு இல்லையாயினும், தகுதி உண்டு என்பது மட்டும் தலைவர்களுக்கு நன்கு தெரியும். கவிமணியின் நேர்மையான வாழ்க்கை, திறமை, அவர் கடைப்பிடித்த கொள்கைகள் இவை களே அவருக்கு இந்நிலையை அளித்தன என்னலாம். எனினும் பிள்ளையவர்கள், பதவியைப் பெரிதென்று கருதியவர் அல்லர்.

## பதவி பெரிதன்று

கவிமணி தமிழ் விரிவுரையாளர் பதவிக்கு வரும் காலத்தில், மகளிர் கல்லூரித் தலைவியாக விளங்கியவர் திருமதி வாட்ஸ் அம்மையார். கல்லூரியில் விரிவுரையாளர் தேவைப்பட்ட பொழுது, அந்த இடத்தை நிரப்பத்தக்க திறமை வாய்ந்தவர் தேசிகவிநாயகம் பிள்ளை என்பது அம்மையாருக்கு நன்கு தெரியும். எனவே, அவர் பிள்ளையவர்களை அழைத்து வினவ, அவரும், "இப் பதவிக்குப் பெண்கள் வருவதாக இருந்தால், எனக்கு வேண்டியதில்லை; இல்லையேல் தங்கள் விருப்பப்படி இருந்து வருகின்றேன்" என்றார். அம்மையார் இதனைக் கல்வி இலாகாத் தலைவருக்கு அறிவிக்கவே, அவரும் ஒப்புக்கொள்ளலானார்; ஆயினும், நற்சான்று இதழொன்று வாங்கி அனுப்புமாறு கேட்டுக் கொண்டார். அதற்கு அம்மையார், "நற்சான்று இதழ் வேண்டுமென்றால், அவர் இப் பதவியே வேண்டியதில்லை என்பார்; எதன் பொருட்டும் எவரையுஞ் சென்று கெஞ்சும் வழக்கம் அவர்பால் இல்லை; ஆகவே, சான்றிதழ் வேண்டுமென்ற தேவை இல்லை; ஆணை அனுப்புவது சிறப்பு" என்று அறிவித்தார்.

பின்பு அம்மையார் பிள்ளையவர்களைக் கண்டு, "உங்களுக்கு விரிவுரையாளர் பதவி கிடைக்க வேண்டுமேல், நற்சான்றிதழ் வாங்கித் தரல் வேண்டும்" என்றார். அவர் உடனே, "சான்றிதழ் வாங்கித் தரவும் வேண்டாம்; இப் பதவியும் எனக்கு வேண்டாம்" என்று விடை பகர்ந்தார். அம்மையார் நகைத்துக்

கொண்டே நிகழ்ந்தவற்றை நிகழ்த்தினர். சில நாட்களில் கல்வி இலாகாத் தலைவரிடமிருந்து ஆணையும் வரலாயிற்று. கவிமணியும், புதிய பணியில் மகிழ்ச்சியோடு ஈடுபட்டு, அதனைத் திறமையோடு நடாத்தினர்.

## விடுதலை

அவர் திருவனந்தபுரத்தில் மகளிர் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராக இருந்த பொழுது, ஏவலாளன் ஒருவன் அவரிடம் வந்து கல்லூரித் தலைவி அழைப்பதாகக் கூறினன். கவிமணியுஞ் சென்றார். அங்குக் கல்வி இலாகாத் தலைவர் (டயரக்டர்) அமர்ந்திருந்தார். அவர் கவிமணியிடம், "நீர் ஏன் ஆண்கள் கல்லூரியில் வேலைக்கு விண்ணப்பஞ் செய்யவில்லை?" என்று கேட்டார்.

**கவிமணி:** இங்கு நான் சுதந்திரமாக இருக்கின்றேன்; இதனைத் துறந்து அங்கு அடிமை வாழ்வுக்கு மனுப்போடவா கூறுகின்றீர்கள்?

**க. இ. தலைவர்:** இது பெண்கள் கல்லூரி; இங்குப் பெண்களே வேலை பார்க்க வேண்டும்.

**கவிமணி:** பெண்கள் இங்கு வேலைக்கு வருவதாயின், நான் இதனை விட்டுப் போய்விடுகின்றேன்.

**க. இ. தலைவர்:** உங்களுக்கு உபகாரச் சம்பளந் தந்து அங்கு அனுப்புகின்றோம்.

**கவிமணி:** தாங்கள் என்னை அங்கு அனுப்புவதன் முன் எனது ராஜிநாமாவைப் பெற்றுக் கொள்ளுங்கள். இதோ! எழுதிக் கொண்டு வந்து விடுகின்றேன்.

இதனைச் செவியுற்ற கல்வி இலாகாத் தலைவர் ஒன்றுமே பேசவில்லை. ஏனெனில், இத்தகைய விடை கிடைக்குமென்று அவர் கனவிலும் கருதவில்லை. பின்பு, அவர் கவிமணியிடம் நயந்து பேசி இதமாக நடந்து கொண்டார். ஆயினும், கவிமணி பின் தொழில் பார்க்க விழைந்தாரில்லை; எனவே தம்மைப் பிரித்து விடுமாறு கேட்டுக் கொண்டார். கல்லூரித் தலைவி அப்பொழுது புதிதாக வந்தவராகையால், அவர் கவிமணியைத் தொழிலில் இருக்குமாறு மீண்டும் மீண்டும் வற்புறுத்தி வேண்டினர். எனினும், அவர் அதற்கு உடன்படாது போகவே, அவர் வேலையிலிருந்து விடுதலை பெற வேண்டியதாயிற்று. எனவே கவிமணி 1931-ம் ஆண்டு உதவிச் சம்பளம் பெற்றுத் தொழிலி லிருந்து விடுதலை பெற்ருர்.

---

# 4. கவிதை இயற்றல்

## முன்னுரை

தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் கவிமணியாக விளங்குவதற்கு ஏற்ற அறிகுறிகள் அன்னாரின் இளமைப் பருவத்தில் அமைந்து விளங்கலாயின என்பது முன்னர்க் குறிப்பிடப்பட்டது. ஆகவே, அத்தகைய இளமைப் பருவ நிகழ்ச்சிகளை இங்கு நோக்குவது ஏற்புடைத்தாகும்.

## பிள்ளைக்கவி

கவிமணியின் பாட்டனாராகிய மாணிக்கவாசகம் பிள்ளை அவரை மிக்க அன்புடன் கண்காணித்து வந்ததால், இளமைப் பருவத்தில் கவிமணி, தமது பாட்டனாரின் பக்கத்தில் துயில்வது வழக்கமாகும். அன்புடையார் மாட்டுச் சிறுவர்களும் அன்பு பாராட்டுவது இயல்புதானே!

மாணிக்கவாசகம் பிள்ளை இரவில் நீண்ட நேரம் விழித்திருந்து கவிதைகள் புனைவார். அவரின் அண்மையில் கண்வளர்கின்ற தேசிகவிநாயகம் பிள்ளை இதனை ஊன்றி நோக்கலானார்; தமது பாட்டனார் கவி பாடிக் களிப்பதைக் கண்ணுற்றுத் தாமும் அவ்வாறு கவிதைகள் புனைதல் வேண்டும் என்று எண்ணினார். அவரது மெல்லிய உள்ளத்தில் அரும்பிய இவ்வுணர்ச்சி, நாளடைவில் கவிதைகள் புனைவதற்கு ஏதுவாக மலர்ச்சி பெற்று விளங்கலாயிற்று.

பிள்ளையவர்களும் இளமைப் பருவத்தில் கவிதைகளை இயற்றி, எவரும் காணாத விடங்களில் அவைகளைப் பாடிக் களிப்பதும், பிறர் காணின் என்ன நினைந்து விடுவார்களோ என்று நாணி, அவைகளைக் கிழித்து எறிவதும் வழக்கமாகும். அவர் தாம் இயற்றிய கவிதைகளை மறைவாக நின்று பாடி மகிழ்வதையும், எழுதிய அந்தக் காகிதங்களைக் கிழித்து எறிவதையும், சில சமயங்களில் சாந்தலிங்கத் தம்பிரான் கண்டிருக்கின்றார். அக்காலத்தில் அவர் ஒரு பிள்ளைக் கவியாக விளங்கலானார் என்பதில் ஐயமில்லை. ஆயினும், அவர் 'பிள்ளைக்கவி' என்பதைத் தம்பிரானைத் தவிர, வேறு எவராலும் அறிந்து கொள்ள இயலவில்லை.

## மகிழ்ச்சிப் பெருக்கு

ஒரு நாள் தம்பிரான் பிள்ளையவர்களோடு நெடும் பொழுது உரையாடிக் கொண்டிருந்தார். அன்று, "வருங்காலத்தில் நீ ஒரு பெரும் கவிஞனாகத் திகழ்வாய்; அதற்குரிய அறிகுறிகள் உன்னிடம் காணப்படுகின்றன" என்று அவர் வாழ்த்தினார். பிள்ளைக் கவிக்கு என்றுமில்லா உவகை பொங்கியது. தம்பிரானின் வாழ்த்துரைகள், பிள்ளையவர்களின் உள்ளமென்னும் பெருநிலத்தில் முளைத்துத் தோன்றிய கவிதையெனும் சிறு பயிருக்கு, அன்புடன் பாய்ச்சிய நீராக விளங்குவதாயிற்று. எனவே, அவர் கவிதை இயற்றும் துறையில் மேன்மேலும் ஊக்கங்கொண்டு, ஊன்றி உழைக்கவும் தலைப்பட்டார்.

## சிறந்த கவிஞன்

ஒரு நாள் பிள்ளையவர்கள் கவிதை ஒன்றை இயற்றலாயினர். அஃது எதுகை, மோனை நயங்கள் அமையப் பெற்றுச் சொற்சுவை, பொருட் சுவை மல்கி, மிக்க சிறப்பாக அமையலாயிற்று. அவர் அக் கவிதையை மீண்டும் மீண்டும் பாடி மகிழ்ந்து, 'இப் பெற்றிய செய்யுளை இயற்றியவன் நானே?' என்று வியந்தார். அஃது ஒரு பண்பட்ட கவிஞனின் பாடலாகவே காணப்பட்டமையின், கவிமணியும் மகிழ்ச்சியால் பன்முறை பாடிப் பாடி இன்புற்று, 'இத் தகைய செய்யுளை இயற்றும் வன்மை எனக்கு வாய்த்து விட்டதா?' என்று அகமகிழலானர். ஆயினும் அவர், பிறர் இக் கவிதையை எவ்வாறு மதிக்கின்றார்கள் என்பதை அறிய ஆவல் கொண்டார். பிறரிடத்தில் 'நான் இயற்றிய கவிதை' என்று கொடுப்பதற்கோ அவருக்கு நாணம்; எனவே, என்ன செய்வது? என்று எண்ணினர். இறுதியில் அவரது எண்ணம் முற்றுப் பெறுவ தாயிற்று.

மறுநாட் காலையில் ஏனைய மாணவர்கள் வருவதன் முன்பே பிள்ளையவர்கள் பள்ளி சென்று, வகுப்பினுள் நுழைந்து, ஆசிரியரின் இருப்பிடத்தின் கீழ் ஓரிடத்தில் அச் செய்யுளை மறைத்து வைத்துவிட்டு வெளியே வந்தார். பின்னர் மாணவர்கள் செல்லும் பொழுது, அவர்களோடு கூடவே பள்ளிக்குச் சென்றார். வகுப்பினுள் நுழைந்ததும் திடீரென்று அச் செய்யுளை எடுப்பவர் போன்று எடுத்து,அதனை ஆசிரிய

ரின் மேசையின்மீது வைக்கலானர். இந் நிகழ்ச்சியை மற்றைய மாணவர்களும் கண்ணுற்றனர்.

பின்னர், ஆசிரியர் அறையில் நுழைந்ததும், மேசையின் மீது காகிதம் ஒன்று இருத்தலைக் கண்டு, அதனை எடுத்துப் பிரித்துப் படித்தார்; அஃது ஒரு அழகான செந்தமிழ்ப் பாவாக இருப்பதைக் கண்டு, மிக்க மகிழ்ச்சி கொண்டு, அச்செய்யுளின் இன்பத்தில் ஈடுபட்டுத் திளைத்தார்; அது ஒரு நலங்கனிந்த செய்யுளாக இருந்தமையின், அதனை மாணவர்கட்கும் படித்துக் காட்டினர்; அதன் எதுகை, மோனை நயங்களை எடுத்துக் கூறினர்; சொற்பொருட் சிறப்புக்களையும் விளக்கினர். இவைகளைச் செவிமடுத்த பிள்ளையவர்களின் உள்ளம், உவகைக் கடலுள் ஆழ்ந்திருக்கும் என்பதைக் கூறவும் வேண்டுமோ? இறுதியில் ஆசிரியர், "இத்தகைய சீரிய செந்தமிழ்ச் செய்யுளை இயற்றியவர் ஒரு சிறந்த கவிஞரே யாவர்" என்று கூறினர். ஆ! ஆ!! பிள்ளையவர்களின் உள்ள நிலையை என்னென்று புகல்வது?

'ஆம்! நான் சிறந்த கவிஞன்' என்று எண்ணி எண்ணி, அவர் நெஞ்சம் உருகினர். அன்று தொட்டுப் பிள்ளையவர்கள், கவிதைகள் புனைவதில் மேலும் அதிக ஊக்கம் எடுத்துக் கொள்ளலாயினர். அவரது ஊக்கமும், நல் உழைப்பும் பிற்காலத்தில் அவருக்குக் 'கவிமணி' என்னுஞ் சிறப்பை நல்கக் காரணமாக விளங்கின.

மேற் காட்டியவை இரண்டும், பிள்ளையவர்களின் இளமைப் பருவ நிகழ்ச்சிகளாகும். இவைகளினின்றும்

பிள்ளையவர்கள் பிற்காலத்தில் சிறந்த கவிஞராகத் திகழ்வதற்கு ஏற்ற அறிகுறிகள் காணப்படலாயின என்பது வெள்ளிடை மலையாம்.

## குறை நீக்கல்

தொன்மையும், சிறப்பும் வாய்ந்த நந் தமிழ் மொழியில், எட்டுத் தொகையும், பத்துப் பாட்டும், பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் ஆகிய சிறந்த நூல்கள் பல உள்ளன. ஆயினும், இவற்றுள் ஒன்றேனும் சிறுவர்கள் கற்றுணர்ந்து கொள்வதற்கு ஏற்ற முறையில் அமையவில்லை. சுருங்கக் கூறின், தமிழ் மொழியில் சிறுவர்கட்குரிய பாடல்கள் இல்லை என்றே கூறல் வேண்டும்.

கவிமணி, சிறுவர்களும் அமிழ்தினும் இனிய தமிழ்ப் பாடல்களைப் பாடிக் களிக்க வேண்டுமென்று விரும்பினர். ஆகவே, அவர் சிறுவர்களுக்கு ஏற்ற பாடல்களைப் பாடலானர். குழந்தைப் பாடல்கள் தமிழ்மொழியில் இல்லையே என்ற குறை இப்பொழுது இல்லை. பிள்ளையவர்களின் பெரு முயற்சியால் அக் குறை நீக்கப்படலாயிற்று.

இன்றோ, தமிழகத்தில் எத்துணை எத்துணையோ குழந்தைப் பாடல்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. வருங்காலத் தமிழகத்தில் குழந்தைப் பாடல்களே ஒரு தனி இடத்தைப் பெறும் என்னலாம். இலக்கிய உலகிலும் அஃது ஒரு புதிய இடத்தைப் பெறும் என்பதும் உண்மை. ஆயின்; அந்த இடத்தை

முதன் முதலில் தோற்றுவித்த பெருமை கவிமணி யவர்களையே சாரும் என்பதில் ஐயமில்லை.

## காலைப்பாட்டு

சைக்கிள், கிளி, சந்திரன், வெண்ணிலா போன்ற பாக்கள், சிறுவர்கட்கு உண்ண உண்ணத் தெவிட்டாத அமுதமாகத் திகழ்கின்றன. பிள்ளையவர்களின் பாடல்கள் எளிமையும், இனிமையும், தெளிவுங் கலந்து அழகுடன் மிளிர்கின்றன. கவிதைகள் அனைத்தும் சின்னஞ் சிறுவர்கள் பாடிப்பாடி இன்புறத்தக்க முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஈண்டே உண்மைக் கவிஞரின் தன்மை வெளிப்படுகின்றது. கவிஞரின் காலைப் பாட்டை எவரே வியவாமலிருக்க இயலும்? எளிமையும், இனிமையும், தெளிவுங் கலந்த பாடல் இது:

"அருண னுதித்தனன் அம்புஜம் விண்டது
அளிகளும் மொய்த்தன பாராய்
அம்மா நீ எழுந்தோடி வாராய். 1

பசிய புல் நுனியில் பதித்தவெண் முத்தமோ
பனித்துளி தானோ நீ பாராய்
பைங்கிளி எழுந்தோடி வாராய். 2

பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்று
பூஞ்செடி பொலிவதைப் பாராய்
பொன்னே நீ எழுந்தோடி வாராய். 3

காகம் கரைந்தது காலையும் ஆயிற்று
கனியுதிர் காவினைப் பாராய்
கண்ணே நீ எழுந்தோடி வாராய். 4

## உண்மைக் கவிஞர்

'மூதல் துயரம்' என்னும் கவிதையைப் படிக்கும் பொழுதே கண்ணீர் பெருகுகின்றது. தாயின் இளைய மகன் இறந்து விடவே, மூத்த மகன் தம்பியைத் தேடி அன்னையிடம் வினவுவதும், வினவிற்கு அன்னை அன்பு கனிந்த மறுமொழி கொடுப்பதும், மகனின் துயரமும் கன்னெஞ்சும் கரைந்து உருகும் வண்ணம் சொற்பொருட்சுவைகள் பயப்பக் கவிதையிலே பொலிவுபெற அமைத்திருக்கும் பெற்றியை என்னென்று புகழ்வது? இன்னணம் குறித்த பொருட்களை உள்ளவாறு புலப்படுத்துவது அன்றோ உண்மைக் கவிஞரின் பண்பு! அவரன்றோ உண்மைக் கவிஞர்!

## சிறு பா மாலை

இத்தகைய சீரிய செந்தமிழ்க் கவிதைகளைக் கவிமணி, ஆசிரியராக இருக்கும் பொழுதே புனைந்து வரலானார். இப் பாடல்கள் அடங்கிய "சிறுபாமாலை" என்னும் நூல், அப்பொழுதே தொடக்கப் பள்ளி களுக்குப் பாட நூலாக விளங்கியது. அவர் 'அழ கம்மை ஆசிரிய விருத்தம்', 'சுசீந்தை மாலை' என்பன வற்றையும் இயற்றலானார்.

# 5. புகழ் பெறுதல்

## பழையன கழித்தல், புதியன புகுத்தல்

இன்று தமிழ் நாடு தேசிகவிநாயகம் பிள்ளையைக் 'கவிமணி' என்று புகழ்ந்து கொண்டாடுகின்றது. இவ்வாறு புகழ்ந்து கொண்டாட வேண்டுமாயின், அவரிடம் அதற்குரிய பண்பாடுகள் அமைந்திருக்க வேண்டும். அவரிடம் அத்தகைய பண்பாடுகள் நிறைந்து காணப்பட்டதால், அவர் கவிஞராகவும், கவிஞருள் மணியாகவும் விளங்கினர்.

'காரிகை கற்றுக் கவி பாடுவதினும் பேரிகை கொட்டிப் பிழைப்பது நன்றே' என்பது பழமொழி. கவிமணியோ காரிகையைக் கற்றும், அந்தக் காரிகையில் நின்றுவிடவில்லை; சங்க இலக்கியங்களைக் கற்றும், அந்த இலக்கியங்களுக்கு இரையாகி விடவில்லை; இலக்கணங்களைக் குற்றமறக் கற்றும், அந்த இலக்கணங்களில் மாண்டு மடிந்து விடவில்லை; வாழ்த்துப் பாக்களை முறையாகப் பயின்றும், அப் பாடல்களுக்குத் தம்மைப் பணயம் வைத்துவிடவில்லை. ஒருவர் இவையனைத்தும் அறிந்திருக்க வேண்டுவது இன்றியமையாதது. அதன் பொருட்டே கவிமணியும் அவைகளைக் கற்கலானர். கவிமணி பழமைகளைப் போற்றிப் புதியவைகளை வரவேற்றார்; நீக்கத் தக்க பழமைகளை நீக்கி, கொள்ளத் தக்க புதியவைகளைக் கொண்டார். ஆங்கிலக் கவிஞர் டென்னிசனும், "Ring out the old; Ring in the new" என்று கூறுவது இங்கு நோக்கத் தக்கது.

## உரைகல்

ஒரு கவிஞரைப் பற்றி இன்னொரு கவிஞரே நன்கு அறிந்துகொள்ள இயலும் என்பது மறுக்க முடியாத உண்மை. 'பாம்பறியும் பாம்பின் கால்' என்னும் பழமொழியும் இங்கு அறியத் தகும்.

"தேசிக விநாயகத்தின் கவிப்பெருமை
தினமும் கேட்பது என்செவிப் பெருமை"

என்று அரசவைக் கவிஞர், இராமலிங்கம் பிள்ளை கூறுகின்றார்.

"அன்புக் குழந்தை விளையாடும் - நல் இயல்
அழகு பொலிந்து களையாடும்
இன்பத் தமிழருவி யோடும் — தே. வி.
இசைக்கும் பாட்டை மனந்தேடும்"

என்று சுவாமி சுத்தானந்த பாரதியாரும் கூறுகின்றார். எனவே, கவிஞர் இராமலிங்கம் பிள்ளை அறிந்து கொண்ட அளவிலும், கவிஞர் சுத்தானந்த பாரதியார் அறிந்துகொண்ட அளவிலும், ஏனைய மக்கள் அறிந்து கொள்ள இயலாது என்பது உண்மையே. கவிஞர்களே கவிமணியைப் போற்றிப் பாராட்டுவார்களாயின், விருப்பு வெறுப்பின்றி நடுநின்று சீர் தூக்கிக் காணும் ஏனைய மக்களைப் பற்றி இங்குக் கூறவேண்டிய தேவையில்லை. எனவே, தமிழகம் கவிஞரின் திறமையை நன்குணர்ந்து, கவிஞருக்குத் தனது காணிக்கையைச் செலுத்த முன்வரலாயிற்று.

## இன்னிசைக் குயில்

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை தமிழ் இலக்கியங்களை—சிறப்பாகச் செய்யுட்களை—கருத்தூன்றிக் கற்றது போன்று, மில்டன், ஷேக்ஸ்பியர், டென்னிசன், கீட்ஸ், வேட்ஸ்வொர்த் போன்ற ஆங்கிலக் கவிஞர்களின் அருஞ் செய்யுட்களையும் கருத்தூன்றிக் கற்றார். அக் கவிஞர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் படித்து உணர்ந்தார்; 'எது கவிதை' என்பதையும் நுணுகி ஆராய்ந்தார்; கவிதைகளில் குணம் குற்றங்களைக் காணும் முறையையும் விரும்பிக் கற்று, குணம் நாடிக் குற்றமும் நாடும் முறையை மகிழ்ச்சியோடு தெரிந்து கொள்ளலானார்.

"உள்ளத் துள்ளது கவிதை—இன்பம்
உருவெடுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழில்—உண்மை
தெரிந்துரைப்பது கவிதை"

என்று கவிமணியே கவிதைக்கு இலக்கணமும் வகுத்தருளினார். இக்கல்வியே அவர் இயற்றிய கவிதைகளுக்குப் பெருந் துணைபுரிந்து வந்தது. இச் சிறப்பின் காரணமாகவே இன்று கவிஞர்களும், அறிஞர்களும், பொதுமக்களும் கவிமணியைப் போற்றிப் புகழ்கின்றார்கள்.

கவிமணி தொழிலினின்றும் நீங்கி ஓய்வு பெற்றதும், அவர் தமது தமிழ்ப் பணியைப் புத்தேரியிலிருந்து அமைதியாக நடத்தத் தலைப்பட்டார். இச் சமயத்தில் அவரிடம் அரும்பி மலர்ந்த கவிதை

மலர்களில் ஒவ்வொன்றும், ஒவ்வொரு மணியாகவே இலங்கியது என்னலாம். சூழ்ந்துள்ள செந்நெற் பண்ணைகள் — செந்தேன் துளிக்கும் தாமரைப் பொய்கைகள் — வளர்ந்து பொலியும் பூஞ்செடிகள் — எழிலொழுகும் மலர்க் கொடிகள் — பாட்டிசைக்கும் மணி வண்டுகள் — தவழ்ந்து விளையாடி வரும் இளந் தென்றல் — இவ்வாறு காட்சி தரும் புத்தேரிப் பூங்காவில் தமிழர் உள்ளம் நெகிழும்படி இனிய பாட்டுக்கள் இசைக்கும் இன்னிசைக் குயிலாக விளங்கினார் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை.

## இரசிக மணி

இவ் வமயத்தில் தேசிக விநாயகம் பிள்ளையின் கவிதைச் சிறப்பைத் தமிழ் நாடு ஓரளவு உணரத் தொடங்கியது; "பிற நாட்டவர் தத்தம் கவிஞர்களைச் சிறப்பித்துக் கொண்டாடும் பொழுது, நாம் மட்டும் வாளா விருக்கின்றோம்" என்று நாணித் தலை குனிந்தது; கவிஞர் சுப்ரமண்ய பாரதியார் உயிரோடிருக்கும் பொழுது அவரைக் கொண்டாடும் பேறு வாய்க்கவில்லையே என்று கழிவிரக்கம் கொண்டது. எனவே, கண்முன்னே கவிஞராகத் திகழ்ந்த தேசிக விநாயகம் பிள்ளையவர்களைக் கொண்டாடுவதற்கு மனமுவந்து முன்வரலாயிற்று.

இரசிகமணி உயர்திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் என்பவர், ஆங்கிலம் பயின்ற தமிழ் அறிஞர்களுள் ஒருவராவர். இவர், கவிதைகளைச் சுவைத்துப் பொருள் காண்பதிலும் பிறர் மனத்திற் பதியும்

வண்ணம் எடுத்துரைப்பதிலும் மிக்க ஆற்றல் வாய்ந் தவர்; "எனக்குக் கவிதைகளை இரசிக்கத் தெரியும்; ஆனால், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர் களைப் போன்று கவிதைகள் இயற்றத் தெரியாது" என்று நாகர்கோவிலில் நடைபெற்ற தமிழ்க் கலை மாநாட்டின்போது கூறியது இங்குக் குறிப்பிடத் தக்கது.

இவர் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் கவிதைகளை நன்கு சுவைத்து, செல்லும் கூட்டங் களில் அவரது பாடல்களைப் பாடி, அவைகளின் சிறப்பியல்புகளை மக்களுக்கு எடுத்துக் காட்டித் தெளிவு படுத்தினர். அப் பாடல்களின் எளிமையை யும், இனிமையையும், உண்மைப் பண்பாட்டையும் அனைவருக்கும் விளங்குமாறு எடுத்துரைத்தார்; தமது நண்பர்களுக்கு எழுதும் கடிதங்களிலும் கவிமணியின் பாடல்களைப் பாராட்டி எழுதலானர். இவர் தமது தோழர்கட்குக் கவிமணி யவர்களைக் கடிதத்தின் வழி அறிமுகஞ் செய்தார். சுவாமி சுத்தானந்த பாரதி யாரும், "இரசிக மணி எனக்கு எழுதும் கடிதங்களில் தேசிகவிநாயகம் பிள்ளை யவர்களின் பாடல்களைப் போற்றுவதுண்டு" என்று குறிப்பிடுகின்றார்.

## புகழ் பரவல்

அப்பொழுது பொதுவாகத் தமிழ் நாட்டிலுள்ள எல்லா இதழ்களிலும் கவிமணியின் பாடல்கள் வெளி வரலாயின. தமிழன், செந்தமிழ், செந்தமிழ்ச் செல்வி, இலட்சுமி, கலைமகள், குமரன், ஆனந்த விகடன்,

தமிழ் நேசன், சுதேச மித்திரன், ஜனமித்திரன், தின மணி, ஈழகேசரி முதலிய இதழ்களில் கவிமணியின் பாக்கள் வெளிவந்தவண்ண மிருந்தன. பாடப் புத் தகங்களிலும் கவிமணியின் செந்தமிழ்ப் பாக்களின் மணங் கமழலாயின. கவிஞரின் புகழும் தமிழ்நாடு எங்கணும் பரவுவதாயிற்று.

புதுமைப் பதிப்பகத்தார் கவிஞரின் பாடல்களைத் தொகுத்து, 'மலரும், மாலையும்' என்னும் பெயர் சூட்டி 1938-ம் ஆண்டில் முதன் முதலில் வெளியிட்டனர்.

இந் நூலைக் கண்ணுற்ற தமிழக மக்கள் பெரிதும் களிகூர்ந்தனர். இரசிகமணி திரு. டி. கே. சிதம்பர நாத முதலியாரவர்கள், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை யவர்களை 'கண்ணாரக் காண ஒரு கவிஞர்' என்று பாராட்டி, கலைமகள் இதழில் மதிப்புரை ஒன்று வெளியிட்டனர். பேராசிரியர் திரு. கே. சுவாமிநாதன் அவர்களும், இக் கவிதைத் தொகுதியைப் பாராட்டி, இந்துத் தினத்தாளில் மதிப்புரை ஒன்று வெளியிட் டனர். இவ்வாறு, இந் நூல் பல பெரியார்களின் பாராட்டுதலுக்கும் உரியதாயிற்று.

இந் நூலே, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை யின் பெரும் புகழுக்குக் காரணமாக விளங்கியது. இந் நூல் வெளிவந்த பின்னரே, தமிழ் நாட்டில் பெரும்பாலோர், அவரைப் பற்றி நன்கு தெரிந்து கொண்டனர்.

**மகான் ! கலைத்தெய்வம் !**

பெருமை மிகும் இராஜாஜி முதன் முறையாகச் சென்னை மாகாணத்தின் பிரதம அமைச்சராக இருந்த

காலத்தில், ஒருமுறை நாகர்கோவிலுக்குச் சென்றிருந்தார்; அப்பொழுது அங்குத் தமது நண்பர் ஒருவர் இல்லத்தில் தங்கி இருந்தார். அவ்வமயம் இராஜாஜி தமது நண்பரிடம், 'கவிமணியைப் பார்க்க வேண்டும்; அதற்குரிய ஏற்பாடு செய்யுங்கள்' என்றார். உடனே நண்பர், 'ஒரு காரை அனுப்பி அவரை இங்கு அழைத்து வரலாம்' என்று கூறினர். இம்மொழியைச் செவியுற்ற இராஜாஜி, "ஐயையோ! அவர் மகான்! கலைத் தெய்வம்! அவரை நாமே சென்று பார்க்க வேண்டும்" என்று மொழியலானர். அன்பு, அடக்கம், பணிவு, தியாகம் முதலிய பெருங் குணங்களமையப் பெற்றவரல்லவா இராஜாஜி?

இப் பெரியாரிடமிருந்து இத்தகைய உயரிய விடைதானே வெளிப்பட இயலும்! இஃது இராஜாஜியவர்களின் பெருந்தன்மையையும், பணிவையும், கலைக்கும் கலைஞர்கட்கும் அவர் கொடுத்திருந்த மதிப்பையும் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது அன்றோ? உள்ளமெல்லாம் கலையில் தோய, அதனையே தமது பெரு வாழ்வின் உயிராகக் கொண்டு வாழும் ஒரு பெரியாரிடந்தானே இத்தன்மைத்தான சீரிய பண்பாடு வெளிப்படும்? இந் நிகழ்ச்சியால், இராஜாஜி சிறந்த அரசியல் அறிஞர் என்பது மட்டுமின்றி, சிறந்த கலைவல்லுநர் என்பதும் புலப்படும். பின்னர், கலைவல்லுநர் புத்தேரிக்குச் சென்று, கலைத்தெய்வத்தைக் கண்டு மீண்டனர்.

**தமிழ்க் கவிமணி:**

இவ்வாறு தமிழ்ப் பெரியார்கள் தனித்தனி தேசிக விநாயகம் பிள்ளையவர்களுக்குத் தமது

காணிக்கையைச் செலுத்தி வரும்பொழுது, தமிழ் நாடும், பிள்ளையவர்களுக்குத் 'தமிழ்க் கவிமணி' என்னும் சிறப்புப் பெயர் சூட்டி மகிழ ஆர்வங் கொள்ளலாயிற்று. இதன் பொருட்டுச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தார் தேசிக விநாயகம் பிள்ளையவர்கட்கு இதைப் பற்றி எழுதலாயினர். அப்பொழுது அவர் "ஆனையின் தலையில் வைக்க வேண்டிய பாரத்தை, ஆட்டுக் குட்டியின் தலையில் வைக்கின்றீர்கள். என் தலை நசுங்கிப் போகும். தயவு செய்து எனக்கு இந்தப் பட்டம் வேண்டாம்" என்று பதில் வரைந்தனர். எனினும் அவர்கள் விட்டபாடில்லை.

சென்னை மாகாணத் தமிழர் மாநாடு, சென்னைத் தமிழ்ச் சங்க ஆதரவில், பச்சையப்பன் கல்லூரியில் 1940-ம் ஆண்டு நடைபெற்றது. அம் மாநாட்டின் போது, உமாமகேசுவரனார் தலைமையில், தேசிக விநாயகம் பிள்ளையவர்களுக்குத் "தமிழ்க் கவிமணி" என்னும் சிறப்புப் பெயர் வழங்கப்படலாயிற்று. அப்பொழுது தமிழ் நாடு, "நாங்களும் எங்கள் கவிஞரைப் பெருமைப் படுத்திக் கொண்டாடினேம்; பிற நாட்டவருக்கு நாங்கள் பின்னிட மாட்டோம்" என்று விம்மிதத்துடன் தலை தூக்கி நின்றது; 'தமிழ் நாட்டவர் தங்கள் கவிஞர்களைப் பெருமைப் படுத்துவதில்லை' என்ற பழிச் சொல்லையும் போக்கிக் கொண்டது.

## பொன்னுடை போர்த்தல்

பின்பு கவிமணியவர்கட்குத் தங்கள் காணிக்கையைச் செலுத்தத் தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு அன்பரும் முன் வரலாயினர். அறம் வளர்த்த

பெரியாரும், பெரும் வள்ளலுமாகிய செட்டி நாட்டு அரசர், சர். அண்ணாமலைச் செட்டியார், கவிமணிக்குச் சீரிய முறையில் சிறப்புச் செய்ய வேண்டும் என்று எண்ணினர்; கவிஞரின் பெருமையைத் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் வழியாக அவர் அறிந்தமையால், கவிஞரை அழைத்து வரும் பொறுப்பையும் அவருக்கே அளித்து விட்டார். இரசிக மணியும் இதனை ஒப்புக்கொண்டார்.

1943-ம் ஆண்டு மே திங்கள் 11-ம் நாள் தேவகோட்டைக்குக் கவிமணி அவர்களைத் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் அழைத்துச் சென்றார். கவிஞர் சிறந்த முறையில் அங்கு வரவேற்கப்பட்டார். அன்று அவர்கள் முருகப்பா அவர்களின் 'மகளிர் இல்லத்தில்' தங்கினர்கள். மறுநாள் ஆத்தங்குடி என்னும் இடத்திற்குக் கவிஞர் பெருமான் அழைத்துச் செல்லப்பட்டார். அங்குக் கவிமணிக்குப் பாராட்டுக் கூட்டம் நடைபெறலாயிற்று. பல்லாயிரக் கணக்கான மக்கள், கூட்டத்தில் கலந்து கொள்ளலாயினர். அம் மாபெரும் கூட்டத்தில் ராஜா, சர். அண்ணாமலைச் செட்டியார், கவி மணியை வரவேற்று, அரியதோர் சொற்பொழிவு நிகழ்த்தினர்; பின்பு வேலைப்பாடுகளமைந்த பொன்னடை ஒன்றையும் கவிமணிக்குப் போர்த்தி மகிழ்வித்தார்; அத்துடன் வெள்ளியில் வேலைப்பாடுகள் அமைக்கப்பட்டு, பாராட்டுரை பொறிக்கப் பெற்று, நாற்புறமும் தங்கம் பொதியப் பெற்ற 'பாராட்டு இதழ்' அமைந்த பேழை ஒன்றையும் கவிஞருக்கு வழங்கி மாலை சூட்டினர். பின்னர்,

இரசிகமணி, முருகப்பா முதலியோர் சொற்பொழிவு ஆற்றினர்கள். அப்பொழுது, பாராட்டுதலுக்கு நன்றி தெரிவித்து, கவிமணியவர்கள் ஆற்றிய சொற் பொழிவின் சுருக்கம் பின் வருமாறு:

"இனிய தமிழை, செந்தமிழை, எவர்க்கும் ஆசை தரும் பைந்தமிழைப் போற்றி வரும் நகரத்தாரவர் களே! பெண்மணிகளே! முதலில் உங்களுக்கு எனது மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன். ஒரு யானைக்கு அணிவிக்கவேண்டிய பொன்னுடையை ஓர் ஆட்டுக்குட்டிக்கு அணிவித்தார்கள் நமது ராஜா, சர். அண்ணுமலைச் செட்டியார் அவர்கள். இந்த ஆட்டுக் குட்டி இதைத் தாங்குமா? நீங்களே யோசியுங்கள். ஆனல், ராஜா அவர்கள் என்னை யானை என்று நினைத்து இந்தப் பீதாம்பரத்தை அணிவித்திருப்பத ஞல், யானையின் பலம் இந்த ஆட்டுக் குட்டிக்கும் ஏற்படும் அல்லவா?"

"நான், நான்கு ஐந்து வருடம், எக்ஸிமா என்ற நோயினல் மிகவும் கஷ்டப் பட்டேன். அதற்காக ஆங்கிலேய வைத்தியம், அஷ்டாங்க யோகம் முதலிய முறைகளிலெல்லாம் வைத்தியம் பார்த்து விட்டேன். நோய் தீர்ந்த பாடில்லை. முடிவில் ஒருவர், திருச்செந் தூர் முருகன் மீது பாடினல் நோய் தீருமென்று சொன்னர். அவ்விதமே முருகன் மீது பாடினேன். நோயும் ஒருவாறு தீர்ந்து விட்டது. ஏன் இந்தக் கஷ்டம்? எனக்கும் வயதாகி விட்டது. தமது திருவடி நிழலில் சேர்த்துக்கொள்ள வேண்டியது தானே! அவ் விதம் செய்யாமல் ஏன் காப்பாற்றினர்? என்று

யோசித்துப் பார்த்தேன். ஒன்றும் புலப்படவில்லை. ஆனால், இன்றுதான் புலப்பட்டது. 'நகரத்தார் மகா சந்நிதானத்திலே நமது ராஜா அவர்கள் உனக்குப் பெருமை செய்ய வேண்டியதிருக்கிறது; கவலைப் படாதே' என்று என்னை அந் நோயினின்றும் அவர் காப்பாற்றியிருக்கிறார் என்று இப்பொழுது நினைக் கிறேன்".

"ஆயுதங்களினால் உலகத்தை வென்றுவிடலாம் என்று சில சண்டாளர்கள் நினைக்கிறார்கள். அது தவறு. அன்பினால் யாவற்றையும் வெல்லலாம். இப் பொழுது என்னை உங்கள் அன்பினால் விலைக்கே வாங்கிவிட்டீர்கள். ஏதோ நான் பித்தன் போல் பாடிய பாட்டுக்களை மெருகு கொடுத்து அழகு செய்து டி. கே. சி. அவர்கள் உங்களை இரசிக்கச் செய்கிறார். அவர் யாவரையும் எளிதில் மயக்க வல்லவர்; எவர் மனத்தையும் தம்மிடம் இழுத்து விடுவார். அதனால் மயங்கிய நீங்கள் என்னை இவ்விதம் பெருமைப் படுத் தினதற்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகி றேன்? நீங்கள் எல்லோரும் நீடூழி காலம் வாழ வேண்டும் என்பதே என் பிரார்த்தனை."

மறுநாள் ராஜா, ஸர். அண்ணாமலை மன்னர் மாளி கையில், விருந்து ஒன்றும் கவிமணியின் பொருட்டு நடைபெறலாயிற்று. விருந்தின் முடிவில் அண்ணா மலை மன்னர், ஆயிரம் ரூபாயடங்கிய பை ஒன்றைக் கவிமணியிடம் நீட்டி, 'காணிக்கையாக இதனைப் பெற் றுக் கொள்ளவேண்டும்' என்று வேண்டினார். ஆனால் கவிமணி அதனைப் பெற்றுக்கொள்ளாது, 'ஐயா இது

எனக்கு எதற்கு? இதனை ஏதேனும் ஒரு அறச் செயலுக்குச் செலவிடுங்கள்' என்றார். ஆயினும், இஃது அண்ணாமலை மன்னருக்கு வெறுப் புணர்ச்சியை உண்டுபண்ணுமோ என்று எண்ணி, மறு கணமே அதனைப் பெற்றுக் கொண்டார்; பெற்றபின் அண்மையிலிருந்த முருகப்பா அவர்களிடம் கொடுத்து விட்டார்.

பொன்னுடை போர்த்தியதைப் பற்றிக் 'கல்கி' நகைச்சுவையாகத் தமது வெளியீட்டில் "நூல் விலை அதிகமாக இருக்கும் காலத்தில் பொன்னுடையைப் போர்த்திக் கவியைத் தண்டிக்கலாமா? நூல் விலை அதிகத்துக்குப் பொன் என்றால், காகிதவிலை அதிகப்பட்டதற்காக வெள்ளி யிதழ். பஞ்சம் ஏற்பட்டால் தனவணிகர்களுக்கு நூல் பொன்னாகவும், தாள் வெள்ளியாகவும் மாறிவிடும் போலும்!" என்று எழுதினார்.

## தமிழ்ப் பரிசு நிறுவல்

பின் முருகப்பா அவர்களிடம் கொடுக்கப்பட்ட ரூபாய் ஆயிரத்துக்கும் வெள்ளிப் பாத்திரங்கள் செய்யப்பட்டன. திங்கள் சில சென்றபின், அப் பாத்திரங்கள், திருநெல்வேலி திவான் பகதூர் ஆவிடையப்ப பிள்ளை, ஆத்தங்குடி சுப்பையா செட்டியார், இரசிகமணி என்னும் மூன்று பெரியார்களையும் துணைக்கொண்டு கவிமணியவர்கள் இல்லத்தை அடைந்தன. இச் செயலைக் கண்ணுற்ற கவிமணி திகைத்து நின்றார் என்றே கூறவேண்டும். ஆனால் அவர் பெற்றுக்கொண்டதற்கு ஏற்ப உள்ள தொகையை, அவர் அறச் செயலில் செலவிடத் துணிந்தார்;

தமது அருமை அன்னையார்—ஆதிலட்சுமி அம்மையார்—பெயரால் திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகத்துக்கு ரூபாய் ஆயிரம் விடுத்து அதனால் வரும் பலிசையைப் பல்கலைக் கழகத்தில் பி. ஏ. வகுப்பில் தமிழில் முதல்வராகத் தேறுகின்ற மாணவருக்குப் பரிசளிக்குமாறு செய்துள்ளார். இத்தகைய செயலை எவரிடம் காண இயலும்? பொருளாசையற்ற பண்பட்ட உள்ளமுடைய ஒருவரிடந்தானே காண இயலும்!

## பிறவிப்பயன்

கவிமணியவர்களின் 70-வது ஆண்டு நிறைவு விழா, 1945-ம் ஆண்டு ஆடித் திங்கள் தமிழ் நாடு எங்கணும் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. அன்று கவிஞர் பிறந்த தாயகமாகிய நாஞ்சில் நாட்டிலும், அவ்விழா மிக்க சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. அப்பொழுது நாகர்கோவில் எஸ். எல். பி. ஆங்கில உயர்நிலைப் பள்ளியில் வைத்துப் பொதுக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்குத் தலைமை தாங்கியவர், திருவாங்கூர் உயர்தர நீதிமன்றத் தலைவராக விளங்கிய திரு. எஸ். ஐ. சத்தியநேசன் எம். ஏ. பி. எல். ஆவர். இவர் தமது பெயருக்கு ஏற்ற முறையில் நடு நிலை தவறாது நீதி வழங்கிய பெரியார்.

அன்று நடைபெற்ற கூட்டத்திற்குக் கவிமணியும் அழைக்கப்பட்டிருந்தார். பல பெரியார்கள் கவிமணியவர்களைப் பாராட்டிப் பேசினர்; பலர் பாராட்டு இதழ்கள் வழங்கினர்; பிற சிறப்புக்களும் செய்தனர். இவைகளை ஏற்றுக்கொண்டிருந்த கவிமணி

நன்றி தெரிவிக்கும்பொழுது, "நமது பக்தியை வெளிப் படுத்துவதற்குச் சுவாமிக்குச் சந்தனத்தைக் குடங் குடமாகக் கொட்டுகிறோம். பன்னீரைக் குப்பி குப்பி யாகக் கவிழ்க்கிறோம். ஆரங்களை ஒன்றன்மேல் ஒன்றாக அள்ளிப் போடுகிறோம். தோத்திரப் பாடல் களைச் சோர்வில்லாமல் பாடிப் புகழ்கிறோம். இவற்றை எல்லாம் அவரால் தாங்கிக்கொள்ள முடிகிறது. ஏதனால்? அவர் கல்லாய் இருப்பதால். நானோ ஒரு சாதாரண மனிதன். இவற்றை என் உடலும், மனமும் தாங்கிக் கொள்ளுமா? நீங்களே யோசியுங்கள். இந்தப் புகழ்மொழிகளை எல்லாம் கேட்டு என் உள்ளம் ஒருக்கால் பொங்கிப் பெருமிதம் கொண்டு விடாதா? ஆனால் நீங்கள் வாசித்தளித்தது 'உபசாரப் பத்திரம்' என்று நீங்களே குறிப்பிட்டிருக்கிறீர்கள். ஆதலால், இதில் பொறிக்கப்பட்டவை எல்லாம் உபசார மொழி கள் என்றே கருதி அமைகிறேன். நீங்கள் என்னிடம் வைத்துள்ள அன்பைக் கண்டு பெரும் மகிழ்ச்சி உண் டாகிறது. இன்று நான் பிறந்த பயனைப் பெற்று விட்டது போலவே தோன்றுகிறது. உங்களையெல்லாம் வாயார வாழ்த்துகிறேன்" என்று, அன்றலர்ந்த செந்தாமரை போன்ற முகத்தொடு, விம்மிதத்துடன் கூறினார். உண்மையில் கவிஞர் தமது பிறவிப் பய னைப் பெற்றார்; தமிழ் நாடும் தனது காணிக்கையைச் செலுத்தியது; இன்னும் செலுத்திக் கொண்டே இருக்கின்றது.

## பிற சிறப்புக்கள்

பின்பு, 1944-ம் ஆண்டு, செப்டம்பர்த் திங்கள் 26-ம் நாள், திருநெல்வேலிக் கலையன்பர்கள் கவிமணிக்குச்

சிறப்புச் செய்தனர்; விருந்துகளும் ஆடல் பாடல் களும் நடத்தினர்; பொற்றகட்டில் 'பாராட்டு இதழும்' வழங்கிப் பெருமையுடன் சிறப்பித்தனர்.

இந்திய நாட்டின் முன்னாள் நிதி அமைச்சரும், சிறந்த தமிழ் அறிஞருமாகிய உயர்திரு, ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்களும், 1950-ம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 28-ம் நாள் நாகர்கோவிலில் வைத்து, கவிமணி யவர்களுக்குப் பொன்னாடை போர்த்தி மகிழலானார். பின்பு அவ்வாண்டில் டிசம்பர்த் திங்கள் 1-ம் நாள் திருவாவடுதுறை ஆதீனம் திருப்பெருந்திரு அம்பலவாண சுவாமிகள் அவர்களும், கவிமணியவர்களைப் பொன்னாடை போர்த்தி மகிழ் வித்தார்கள். திருவாவடுதுறை ஆதீனப் புலவரான சாந்தலிங்கத் தம்பிரானிடம் தமிழ்ப் பயின்ற கவி மணியை அவ் வாதீனச் சுவாமிகள் சிறப்பித்ததும், இங்குச் சிறப்புடன் குறிப்பிடத் தக்கதாகும்.

தமிழகப் பெரியார்கள் பலர், கவிமணியவர்களைப் பற்றிப் பல கட்டுரைகள் வரைந்து வெளியிடலானார் கள். கவிஞர்களும் பல பாக்களை இயற்றித் தங்கள் அன்பைப் புலப்படுத்தினார்கள். எழுத்தாளர்களும் நூல்களை எழுதி வெளியிடலாயினர். கவிஞர் சுத்தா னந்த பாரதியார் அவர்களும், கவிமணியைப் பற்றி நூலொன்று எழுதியுள்ளார். அதனில், கவிமணியைக் குறித்து "தேசிக விநாயகம் பிள்ளையை நினைக்கும் போது கொஞ்சும் குழந்தையின் அன்பே என்முன் நிற்கிறது. ஆதலால், நான் அவரை அன்புக் கவிமணி என்கின்றேன். அவர் உள்ளம் அன்பு; அவர் சொற்

கள் அன்பிற் குழைத்த அமுதம்; அவர் கவிதைகள் கருணையிற் பூத்த அன்பிசை. அவரைக் கவிமணி என்பதைவிட 'அன்பு மணி' என்பதே பொருந்தும்" என்று அவர் குறிப்பிடுகின்றார்.

---

# 6. அருந்தொண்டு ஆற்றல்

## தொண்டு

கைம்மாறு கருதிச் செய்யும் எத்தகைய முயற்சியும் தொண்டாகக் கருதப்பட மாட்டாது. பயன் நோக்காது செய்யும் செயல் ஒன்றே தொண்டு என்பது. கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை பயன் நோக்காது பணி புரிந்தமையால், அவர் இயற்றிய பணி, தொண்டாக எண்ணப்படுகின்றது. சிறப்புப் பெயர்கள் பெற வேண்டும் என்னும் எண்ணத்துடனே, அல்லது புகழ் பெற வேண்டும் என்னும் நோக்கத்துடனே அவர் கவிதைகள் இயற்றியவர் அல்லர் என்பதை முன்பு கண்டோம். மேற் கூறிய குறிக்கோளோடு அவர் கவிதைகள் புனைந்திருந்தால், அது தொண்டாகக் கருதுவதற்கு இல்லை. கவிமணி அந் நோக்கத்தோடு கவிதைகள் இயற்றுமையால் அவரது முயற்சி, தொண்டு என்று எண்ணப்படுகின்றது.

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை பொதுவாகத் தமிழ் இலக்கியத் துறைக்கும், சிறப்பாகச் செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர்கட்கும் தொண்டு புரிந்தார் என்று கூறுவது சாலச் சிறப்புடையதாகும். 'மலரும் மாலையும்' என்னும் கவிதைத் தொகுதியைச் "செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர்கட்கு இந்த நூலுரியதாய் என்றும் வாழ்கவே" என்று செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர்கட்கே உரிமைப் படுத்தினர். இதுவன்றோ தொண்டு!

## குறிக்கோள்

கவிதைகள் பாடிக் களிப்பதில் கவிமணி இன்ப முற்றார். அஃது அவர்க்கு மன அமைதியையும் நல்கியது. தாம் இன்புறும் பொருட்டுச் செய்த ஒன்று பிறருக்குப் பயன்படலாயிற்று; எனின், தாம் இன்புறுதல் ஒன்றே குறிக்கோளாகக்கொண்டு கவிதைகள் பாட, அஃது பிறருக்குப் பயன் நல்க, அது மட்டுங் கொண்டு அதனைத் தொண்டாகக் கொள்ள இயலாது. ஆயின், கவிமணியின் நோக்கம் தாம் இன்புறுதல் ஒன்று மட்டு மன்று. தாம் இன்புறுதல் ஒன்றே நோக்கமாகக் கொண்டிருப்பராயின், அவர் பல்வேறு கடின நடையுடைய நூல்களைத் — தொடர் நிலைச் செய்யுட்களை — இயற்றியிருக்கலாம். ஆயின், அவர் அவ்வாறு இயற்றவில்லை. "தாமும் இன்புறல் வேண்டும்; பிறருக்கும் பயன் நல்க வேண்டும்; அதிலும், இல்லாத ஒன்றை இயற்றி அக் குறை நீக்கல் வேண்டும்" என்று அவர் கருதலாயினர். இதுவே பெருந் தொண்டாக எண்ணப்படும். சிறுவர்கள் பாடிக் களிப்பதற்கு ஏற்ற பாடல்கள் இல்லை என்றிருந்த குறையினை அவர் போக்கினர். இதுவே கவிமணி புரிந்த பெருந் தொண்டாகும்.

## கவிதைச் சிறப்பு

கவிமணியின் கவிதைகள் அனைத்தும், எளிமையும், இனிமையும், தெளிவும் உடையவை; சிறுவர்கள் இன்புற்றுக் கற்கும் இயல்பும் பொருந்தியவை; கடின நடையுடையவையும், பொருள் தெரியாது மயங்குஞ்

சொற்கள் கலந்தவையும் அல்ல; சந்திப் புணர்ப்பால் பெருந் தொல்லை விளைவிப்பவையும் அல்ல. இதற்கு மாறாகச் சுவை கனிந்தவை; சொற்பொருட் சிறப்பும் அமைந்தவையாம். அவரது பாடல்களில் எதுகை மோனை நயங்களுக்கோ, தன்மை, உவமை அணி களுக்கோ குறைவு இல்லை; ஓசை இன்பத்திற்கும் எள்ளளவும் குறைவே இல்லை. ஒழுகிய ஓசை, விழுமிய பொருள், பண்டிதரும், பாமரரும் வியக்கும் பண்பு இவை செறிந்தவை கவிமணியின் கவிதைகளாகும். இத்தகைய பாக்களைப் புனைவது எளியதொன்று அன்று. இவ்வாறு பாக்களைப் புனைந்து பலர்க்கும் பயன் நல்குமாறு, பயன் நோக்காது உதவியதே கவிமணி புரிந்த சீரிய தொண்டாம்.

கவிதைகட்கென்று அவர் எடுத்துக்கொள்ளும் பொருட்களோ சாதாரணமானவை. ஆயின், அவை களை அழகு படுத்தும் பண்போ, வியந்து ஏத்தும் தன்மையில் அமைந்திருக்கும். ‘குதிரையின் புலம்பல்’ ‘பசு’ என்னும் பாடல்களில் நாம் இவைகளைக் கண்டு மகிழலாம். அவர் கையாளும் உவமைகள் மிகவும் சாதாரணமானவைகளே ஆகும். ஆயினும், அவை களைப் பொலிவுபெறச் செய்திருக்கும் பண்போ, நாம் வியப்படையும்வண்ணம் வனப்பு வாய்ந்துகாணப்படும்.

‘ஐந்து வயதுப்பிள்ளை கோலமிட்டால்—அதை
அழகில்லை என்றழிக்கும் தாயருமுண்டோ?’

பாருங்கள். சாதாரண உவமை, கவிமணியின் கவிதை யில் எவ்வாறு சிறப்புற்றுத் திகழ்கின்றது! அவர், ‘அடுப்பைக் கோழி கிண்டுதையா’ என்பது போன்று

பொதுவாக வழக்கிலுள்ள பழமொழிகளை நிரம்பக் கையாண்டுள்ளார். அவரது பாடல்களில் நிரம்ப நகைச்சுவைப் பகுதிகளைக் காணலாம். 'அப்பம் திருடின எலி' முதலியன வெல்லாம் நகைச்சுவைப் பகுதிகளாகவே அமைக்கப்பட்டுள்ளன. 'மருமக்கள் வழி மான்மியம்' என்னும் நூன் முற்றும் நகைச்சுவை நிரம்பியதாகவே மிளிர்கின்றது. இவற்றின் மேல், ஊன்றி உணர்தற்குரிய உண்மைகளையும் அவரது கவிதைகளில் பரக்கக் காணலாம். எனவே, சிறுவர்கட்கு ஏற்ற முறையிற் பாடல்கள் — அவர்கள் உணர்ந்து கொள்ளும் எளிய உவமைகள்—பழமொழிகள் — நகைச் சுவைப் பகுதிகள் — ஊன்றி உணரும் உண்மைகள் — இவைகளைப் புகுத்தி நூல் செய்து சிறுவர்கட்கு அளித்த அவர் தொண்டினை என்னென்று புகல்வது?

## மறுமலர்ச்சிக் கவிஞர்

தமிழிலக்கியத் துறையில்—சிறப்பாகச் செய்யுட் பகுதியில்—மறுமலர்ச்சியை நுழைத்த பெருமை சுப்ரமண்ய பாரதியார் அவர்கட்கே உரியதாம். அவருக்குப் பின்பு தமிழிலக்கியம் மறுமலர்ச்சி பெற்று மிளிர்கின்றது. பாரதியாரை அடியொற்றிப் பாடிய பலருள் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையும் ஒருவராவர்.

சுப்ரமண்ய பாரதியாருக்கு அடுத்த படியில் வைத்து எண்ணத் தக்க பெருமை வாய்ந்த மறுமலர்ச்சிக் கவிஞர், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையே ஆவர். உயர்திரு, பி. ஸ்ரீ. ஆச்சாரியார்

மறுமலர்ச்சிக் கவிஞர்களை எண்ணியபோது, 'சுப்ர மண்ய பாரதியார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, அரசவைக் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை' என்றே முறைப்படுத்தினர்.

## மலரும் மாலையும்

இந் நூல், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களால் இயற்றப் பெற்ற கவிதைகளின் தொகுதி யாகும். இஃது முதன் முதலில் புதுமைப் பதிப்பகத் தாரால் 1938-ம் ஆண்டில் வெளியிடப்பட்டது என்பது முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை வெளி யிடும் முயற்சியில் திருவாளர்கள் எஸ். வையாபுரிப் பிள்ளை, மு. அருணாசலம் போன்றோர் பெரும் பங்கு எடுத்துக் கொண்டனர். இந் நூல், 1941-ம் ஆண்டில் இரண்டாம் முறையாக வெளியிடப்பட்டது. இதனைத் தொடர்ந்து மூன்றாவது பதிப்பும், 1944-ம் ஆண்டில் வெளிவரலாயிற்று. பின்னர், கவிமணி அவர்கள் பிற்காலத்தில் இயற்றிய கவிதைகளும் இணைக்கப் பட்டு, 1951-ம் ஆண்டு ஜனவரித் திங்கள் 26-ம் நாள் இந்நூலின் நான்காவது பதிப்பை அழகிய முறையில் பாரி நிலையத்தார் வெளியிட்டுள்ளனர். இப் பதிப்பில் கவிஞரின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றிய விளக்க மான குறிப்பும், அவரது வாழ்கை நிகழ்ச்சிகளும் தரப்பட்டுள்ளன. அவை, கவிஞரின் வாழ்க்கை வரலாற்றை ஓரளவு அறிந்து கொள்வதற்குப் பெருந் துணை புரிவன வாகும். இஃதுடன், ஆங்கிலப் பேராசிரியர் திரு. கே. சுவாமிநாதன் அவர்கள்

'இந்து'த் தினத்தாளில் வெளியிட்ட மதிப்புரையும் இதனில் இணைக்கப்பட்டுள்ளது.

இந் நூலின் முதற் பதிப்பில் 'ஆசிய ஜோதி,' 'உமர்க்கய்யாம்' என்னும் பகுதிகளும் அடங்கியிருந்தன. ஆயின், பிற் காலத்தில் இப் பகுதிகள் 'ஆசிய ஜோதி' 'உமர்க்கய்யம்' என்னும் பெயர்களில், தனி நூல்களாக வெளிவரலாயின. ஆகவே, நான்காவது பதிப்பு, அப் பகுதிகள் நீக்கப்பட்டு பக்தி மஞ்சரி, இலக்கியம், சரித்திரக் கவிதை, இயற்கை இன்பம், மழலை மொழி, உள்ளமும் உணர்வும், வையமும் வாழ்வும், சமூகம், தேசீயம், வாழ்த்து, சரமகவி, கதம்பம், பிற்சேர்வு எனப் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.

## நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம்

இஃது சமுதாயத்திலே சீர்திருத்தத்தை விளைத்த சிறந்த நூல் என்பது, மறுக்க இயலாத உண்மையாகும். அக்காலத்தில் நாஞ்சில் நாட்டில் 'வேளாளர்' என்னும் குலத்தினரிடை 'மருமக்கள் வழியே' நிலவி வந்தது. அஃதாவது ஒரு தந்தையின் சொத்துரிமைகள் எல்லாம், அவன் ஈன்ற மக்களுக்குச் சேரா. மக்கள் புழுங்கச் சொத்துக்களின் உரிமைகளை மருமகனே ஏற்று நடத்துவான். அச் சொத்துக்களிலுள்ள வருவாய் முதலியன வெல்லாம் மருமகனுக்கே உரிமையுடையவையாகும். பெற்ற மக்கள் இதனைப் பார்த்து மனமேங்கிக் கொண்டிருக்க வேண்டும். இஃது ஒரு அறக்கொடிய இழிந்த வழக்கமன்றோ! இவ் வழக்கமே 'மருமக்கள் வழி' என்பது.

இம் மருமக்கள் வழியால், சமூகத்தில் ஏற்பட்ட தொல்லைகள் பல; குடும்பச் சண்டைகள் பல. இதனுல், அக் குலமக்கள், இன்புற்று வாழும் இயல்பை மறந்தனர்; துன்புற்று வாழும் வாழ்க்கையே அவர்களின் இயற்கை வாழ்வாகக் கொண்டனர். இம் மருமக்கள் வழியால் விளையும் தொல்லைகளைக் கண்ட கவிமணி, இவ் வழியை அறவே ஒழிக்க எண்ணினுர்; எனவே, மருமக்கள் வழியைச் சார்ந்த ஒரு குடும்பத்தின் நிலையை—உள்ளதை உள்ளபடி—சொல்லோவியமாக அமைத்துத் தர எண்ணினுர். அவ் வமைப்பே "மருமக்கள்வழி மான்மியம்" என்னும் புதுமைப் பனுவலாகும்.

இதனில் கவிஞர், தாமாகவே ஒரு குடும்பத்தைப் படைத்துக் கொண்டார். ஒரு பெண் நல்லூரில் வேளாளர் குலத்தில் ஒரு ஏழைக் குடும்பத்தில் பிறந்தாள். அவள் தனது பதினுருவது ஆண்டில் தாழக்குடியில் பஞ்ச கல்யாணிப் பிள்ளை என்பவருக்கு ஐந்தாம் மனைவியாக வாழ்க்கைப்பட்டாள். அப் பெண்மணிக்குக் கணவன் இல்லத்தில், மாமி, சக்களத்திகள், மதினி இவர்களால் இழைக்கப் பெற்ற கொடுமைகளை அளவிட்டு உரைக்க இயலாது. ஆயினும் என்ன செய்வது? அவள் பொறுத்துக் கொண்டாள். சில நாட்களில் அவள் கணவனுக்கும், அவனது மருமகனுக்கும் குடும்பக் காரியங்களின் பொருட்டுச் சண்டை உண்டாயிற்று. இறுதியில் அஃது ஒரு பெரும் வழக்காய் முடிந்தது. வழக்கு முடியுமுன் அவள் கணவனும் நோயினுல் பீடிக்கப்பட்டான். அச் சமயம் அவனுடைய வாரிசுகள் இழைத்த இன்னல்

களும் அளவிடற்பாலன அல்ல. அவள் கணவன், இறக்குந் தறுவாயில் தனது மக்களை, காப்பாற்று மாறு மருமகனிடம் ஒப்புவித்தான். ஆனல், அவன் இறந்தவுடன், மனைவிமக்கள் யாவரும் மனையிலிருந்து துரத்தப்பட்டனர். அப்பொழுது, தங்களுக்குள் வழங்கும் மருமக்கள் வழியைப் பற்றி அப் பெண் பழித்துரைக்கின்ருள்.

இக் கதையினைக் கவிஞர் நகைச் சுவை கலந்த நடையிலே தீட்டியுள்ளார். பிற சுவைகளும் இதனில் விரவி வருகின்றன. எனினும், நூன் முற்றும் நகைச் சுவை நிரம்பி யுள்ளமை சிறப்பாகப் பொறிக்கத் தக்கதாகும். இதனைக் கவிஞர், 'குலமுறை கிளத்துப் படலம்' முதலாகக் 'கும்பியெரிச்சல் படலம்' ஈருகப் பதினெரு படலங்களாகப் பகுத்துக் கொள்கின்ருர். சமுதாயத்தில் அமைந்த ஊழல்கள், கொடுமைகள், மடமைகள் எல்லாம் தெளிவாகச் சித்திரித்துக் காட்டப்படுகின்றன.

'மாமி அரசியற் படலத்தில்' மாமியார் நிகழ்த்தும் கொடுமைகள் கூறப்படுகின்றன.

“அவள், அரிசியை நிதமும் அளந்து வைப்பாள்
நல்ல மிளகை நறுக்கி வைப்பாள்
கோல்ல மிளகைக் குறுக்கி வைப்பாள்
உப்பில் புளியை உருட்டி வைப்பாள்
கறிக்குத் தேங்காய் கருக்கி வைப்பாள்
கடுகையும் எண்ணிக் கணக்கிட்டு வைப்பாள்”

இவ்வாறு கவிஞர் மாமியின் கொடுமைகளைக் குறிப்பிட்டு, நகைச் சுவையும் விளக்கின்றார்.

ஒரு நாள் மருமகன் தனது மாதுலரிடம், வழக்குப் போடத் துடங்கி அவரை மிகவும் இழித்துரைக்கின்றான். அதனைக் கவிஞர்,

“ஆரைக் கேட்டுநீர் ஐந்து கலியாணம்
அடுக்கடுக் காகச் செய்தீர் ஐயா ?
பட்டப் பெயரும் பஞ்ச கலியாணிப்
பிள்ளை யென்றுநீர் பெற்று விட்டீரே ”

என்று கூறுவது நகைச் சுவையின் பேரெல்லையை அடைந்து விடுகின்றது.

‘கும்பியெரிச்சற்’ படத்தின் இறுதியில், அப் பெண்மணி ஓலமிடுவதாகக் கவிஞர்,

“ கற்றவர் உளரோ ! கற்றவர் உளரோ !
பெற்ற மக்களைப் பேணி வளர்த்திடாக்
கற்றவர் உளரோ ! கற்றவர் உளரோ !

நீதியும் உளதோ ! நீதியும் உளதோ !
மாதர் கண்ணீர் மாறு நிலத்தில்
நீதியும் உளதோ ! நீதியும் உளதோ !

தெய்வமும் உளதோ ! தெய்வமும் உளதோ !
பொய்வழிப் பொருளைப் போக்கும்இந் நிலத்தில்
தெய்வமும் உளதோ ! தெய்வமும் உளதோ! ”

என்று கூறி முடிப்பது சிலப்பதி காரத்தை —கண்ணகியை— நமது மனக்கண் முன்னே கொண்டு நிறுத்துகின்றது.

இப்புதிய கண்ணகியின் ஓலம் வீணாகிவிடவில்லை. இஃது நாஞ்சில் நாட்டிலுள்ள வேளாண் மக்களின் உள்ளங்களில் ஆழமாகப் பதியலாயிற்று. அவர்கள் தங்கள் சமூகத்திலுள்ள கொடிய வழக்கத்தைப் போக்க வேண்டும் என்று முனைந்தனர். அதன் பயனாக, நாஞ்சில் நாட்டு வேளாளரின் தாயமுறைச் சீர்திருத்த மசோதாவானது, கொல்லம் ஆண்டு 1101-ல் சட்ட சபையில் கொண்டு வரப்பட்டது. அவ்வாண்டிலேயே அது சட்டமாக நிறைவேற்றப்பட்டு, 1102-ல் நடை முறைக்கு வந்தது. இதனால் வேளாளர் சமுதாயமும் உய்ந்தது; எண்ணற்ற மக்களின் கண்ணீரும் துடைக்கப்பட்டது. தந்தையின் சொத்துரிமைகளை ஆண், பெண் என்ற வேற்றுமையின்றி மக்களே பயன் படுத்தும் உரிமை பெற்றனர். எனவே, மக்கட்டாய முறை நடை முறையில் வருவதற்கு ஏதுவாக விளங்கியது 'மருமக்கள் வழி மான்மியமே' ஆகும். இதனால் கவிஞர் அச் சமூகத்திற்குச் செய்த தொண்டை அளவிட்டு உரைக்க இயலாது. இந் நூல் திருவனந்தபுரத்திலிருந்து வெளிவந்த 'தமிழன்' என்னும் இதழில், 1917-ம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் தொடங்கி வெளி வரலாயிற்று. 1918-ம் ஆண்டு பெப்ருவரித் திங்களில் முற்றுப் பெற்றது. இவ் விதழின் ஆசிரியராக இருந்தவர்கள் பண்டித, எஸ். முத்துசாமிப் பிள்ளையவர்களும், திருவனந்தபுரம் மகாராசா கல்லூரி மலையாளப் பேராசிரியர் சி. எஸ். ஏ. அனந்தராமைய சாஸ்திரிகளும் ஆவார்கள்.

இந் நூல், ஆசிரியர் பெயரோடு இதழில் வெளி வரவில்லை; பழைய ஏட்டுச் சுவடியில் இந்த நூலை



அச்சிற் பதிப்பிக்கும் முறையிலேயே வெளிவரலாயிற்று. திருவாளர்கள் கே. ஜி. சேஷையர் அவர்களும், இராவ்சாகிப் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களும் இந் நூலின் பெருமையை யாவரும் அறியச் செய்தனர்.

இந்நூல் தமிழுக்குக் கிடைத்த புதுமையான இலக்கியமாகும். இதனை 1942-ம் ஆண்டில் புதுமைப் பதிப்பகத்தார், நூல் வடிவில் வெளியிட்டுள்ளனர். இந்நூலை, திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களின் முன்னுரையும், பதிப்பகத்தாரின் அழகிய பதிப்பும் பெரிதும் எழில் பெறச் செய்தன. இதனை இரண்டாம் முறையாகப் பாரி நிலையத்தார், 1951-ம் ஆண்டு பெப்ருவரித் திங்களில் வெளியிட்டு உதவியுள்ளனர்.

## ஆசிய ஜோதி

இனி, ஆசிய ஜோதி என்னும் நூலைப் பற்றி ஒரு சிறிது நோக்குவோம். இந் நூலைக் கவிமணி கல்லும் கரைந்துருகும் தீந்தமிழ் நடையில் தந்துள்ளார் என்று குறிப்பிடுவது மிகையாகாது.

> " ஆசிய ஜோதி என்னும் புத்தர் போதம்
> அழகு தமிழிற் சொன்னான் அதுபோதும் "

எனக் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை கூறுவதும் காண்க.

இஃது, புத்தர் பெருமானின் வாழ்க்கை நிகழ்ச்சிகளின் சில கூறுபாடுகளை எடுத்துக் காட்டுவதாகும். இந் நூல் 'The light of Asia' என்னும் ஆங்கில

நூலைத் தழுவி இயற்றப்பட்டதாம். இந் நூற்பாக்கள் பள்ளி மாணவர்கட்குரிய பாட நூல்களில் இடம் பெற்று அவர்களை மகிழ்விக்கின்றன. சென்னை அரசினர் வெளியிட்டுள்ள பாடத் திட்டக் குறிப்பில், செய்யுட் பகுதியில், தொடர் நிலைச் செய்யுட்கு இந் நூலையும் இயைத்துக் கொள்ளுமாறு பொறித்துள்ளமை, இதன் பெருமைக்கோர் சான்றாம்.

## உமர்க்கய்யாம்

கவிமணி பிற கவிஞர் செய்யுட்களை மொழி பெயர்ப்பதிலும் மிக்க திறமை வாய்ந்தவர் என்பது, இங்கு எடுத்துக் காட்டத்தகும். பாரசீக மொழியில் உமர்க்கய்யாம் என்பவர் 'ரூபயாத்' என்னும் நூலை இயற்றி அம் மொழியை வனப்புறச் செய்தார். இந் நூல் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட் டுள்ளமையால், இதன் சிறப்பு நன்கு பெறப்படும். இந் நூலை 'பிஜிரால்ட்' என்பவர் ஆங்கில மொழியில் மொழி பெயர்த்துள்ளார். ஆங்கிலத்திலுள்ள மொழி பெயர்ப்பு நூல்கள் பலவற்றுள்ளும், இவரது மொழி பெயர்ப்பே தலை சிறந்தது என்று கருதப்படுகின்றது. இம் மொழிபெயர்ப்பைத் தழுவி, 'உமர்க்கய்யாம்' என்னும் நூலைக் கவிஞர் தமிழன்னைக்கு உதவலாயினர்; இதனால், 'பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்' என்னும் பாரதியாரின் பொன்மொழியையும் பொன்போற் போற்றினர் என்று கூறத் தடையில்லை.

## மொழி பெயர்ப்பு

மொழி பெயர்ப்பும் எளியதொன்று அன்று. மூலத்தின் சுவை, மொழி பெயர்ப்பிலும் எழுந்து பேச வேண்டும். சிலர் மொழி பெயர்ப்பாராயினும், மூலத்தின் சுவையை மொழி பெயர்ப்பிற் காண்டல் இயலாது. உமர்க்கய்யாம் பாடல்களைத் தமிழில் மொழி பெயர்த்தோர் வேறு சிலர் உளர் எனினும், கவிமணியின் மொழி பெயர்ப்பே நனி சிறந்ததாகக் கருதப்படுகின்றது. இந் நூலை நோக்கின், மொழி பெயர்ப்பில் கவிஞருக்கு இருக்கும் ஆற்றல் நன்கு புலப்படாமற் போகாது. கருத்து அழியாமையையும் — மூலத்தின் சுவையையும் — இனிய ஓசையையும் அவரது மொழி பெயர்ப்பிற் கண்டு களிப்பெய்தலாம். மில்டன், தாகூர் ஆகிய கவிஞர்களின் கவிதைகளுள் சிலவற்றையும் கவிமணி மொழி பெயர்த்துள்ளமை ஈண்டுக் குறிப்பிடற்பாலதாம்.

## இசைப் பாடல்கள்

பிறிதொரு பெருந்தொண்டும் கவிமணி தமிழகத்துக்குப் புரிந்துள்ளார். தமிழில் தக்க இசைப் பாடல்கள் இல்லாமையால், இசை வாணர்கள் வடமொழிப் பாடல்களையே பாடி வரலாயினர். கவிமணி, அவர்கள் பாடுவதற்கு ஏற்ற இசைப் பாடல்கள் பல தமிழில் ஆக்கித் தந்தார். வானொலி நிலையங்களிலிருந்து ஒலி பரப்பப்படும் இசைத் தட்டுக்களிலும் கவிமணியின் இன்னிசைப் பாடல்களைச் செவிமடுத்து மகிழலாம். அவரது இசைப் பாட்டுக்கள், தேவியின் கீர்த்தனைகள்

என்னும் நூலாக வெளிவந்துள்ளது. இந் நூலுக்கு ரூ 500 பரிசு வழங்கப் பெற்றதென்றால், இதன் சிறப்பைப் பற்றி வேறு என்ன கூற வேண்டும்!

## வரலாற்று ஆசிரியர்

மற்றொரு முறையிலும் கவிமணி அருந்தொண்டு ஆற்றலாயினர். கவிமணி ஆங்கில மொழியிலுள்ள பல நூல்களை விரும்பிப் பயின்றார். சிறப்பாக 'செகப்பிரியர்' இலக்கியங்களை ஆழ்ந்து கற்று, அம் மொழியிலும் மிக்க புலமை பெற்றார்; ஆங்கிலத்தில் நன்றாகப் பேசுந் திறனும், எழுதும் ஆற்றலும் வாய்க்கப் பெற்றார். 'காந்தளூர்ச் சாலை' என்னும் அரிய ஆராய்ச்சி நூல் ஆங்கில மொழியில் எழுதப்பெற்றிருப்பது, கவிமணிக்கு அம் மொழியின்பாலுள்ள எழுத்து வன்மையைத் தெள்ளிதிற் புலப்படுத்தும். அறிஞர் பலரின் ஆராய்ச்சிக்கும், தருக்கத்திற்கும் ஏதுவாகிய 'காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி' என்னுஞ் சொற்றொடர்ப் பொருளைத் தக்க சான்று காட்டித் துலக்க முயன்றதால், அதனை ஆங்கில மொழியில் எழுத வேண்டியதாயிற்று. வரலாற்று நூல்களை ஆழ்ந்து கற்பதும், உண்மை காணும் நோக்கொடு அவைகளைத் துருவி ஆராய்வதும் கவிமணியிடம் அமைந்திருந்தன. அவர் ஆய்ந்துகண்ட முடிபுகளைப் பற்றி ஆங்கிலத்தில் பல கட்டுரைகள் தீட்டினார். ஆயின், அவை யாவும் இப்பொழுது கிடைக்கப் பெறுவது அரிதாயிற்று. எனவே, கவிமணி கவிஞர் மட்டுமல்ல, சிறந்த வரலாற்று ஆசிரியரும், ஆராய்ச்சியாளரும் ஆவர்.

## சாசன ஆராய்ச்சி

சாசனங்களை ஆராய்வதில், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை தனிப்பட்ட வேட்கை உடையவர். சிலர் சாசனங்களை ஆராய்வதில் இடர்ப்பாடுற்றுத் தலைவேதனை கொள்வர். எல்லோருக்கும் அஃது இன்பம் நல்காது. கவிமணியோ சாசனங்களை ஆராய்ச்சி புரிவதில் பேரின்பம் கொள்பவர். பண்டைக் கால வரலாற்றுச் செய்திகளை அறிந்து கொள்ளத் துணை நிற்பன இலக்கியங்கள், சாசனங்கள் என்பன வாகும். இவற்றுள் சாசனங்களே ஒரு நாட்டின் ஆட்சி மரபைத் தெளிவிக்க உதவுகின்றது என்பது கவிமணியின் கருத்தாம். அவர் சாசனங்களைப் "பழங்கால வரலாற்றை விளக்கிக் காட்டும் ஒளி விளக்குகள்" என்று குறிப்பிடுகின்றார். அவரது கொள்கையின்படி சாசனம் என்பது, 'கல்லெழுத்து, செப்பேடு, ஓலைப்பிரமாணம், முதலியன ஆகும். சாசனங்களை ஆராய்பவருக்கு எத்தகைய தகுதிகள் வேண்டும் என்றும், தகுதி அனைத்தும் ஒருங்கே பெற்றோரும் தவறுவர் என்றும், தவறுகளைத் திருத்தி உண்மை காணவேண்டுமென்றும் அவர் சுட்டுகின்றார். "தன்னபிமானம் என்ற மாசுநீங்கி, உண்மை காண வேண்டும் என்ற ஆசை சுரக்கின்ற மனநிலை வேண்டும்" என்பதையே அவர் தலைசிறந்த தகுதியாகக் குறிப்பிடுகின்றார். இதனைக் கீழே காண்க:

"பழங்கால வரலாறுகளை நாமறியத் துணை நிற்பன இலக்கியங்கள், சாசனங்கள் என்பவையாகும். இவற்றுள் இலக்கியங்கள் தொடர்ச்சியான வரலாற்

றை நமக்கு உதவவில்லை. சாசனங்கள் ஏற்பட்டது சற்றுப் பிற்பட்டுத்தான். இச் சாசன காலம் முதற் கொண்டே, ஒரு நாட்டின் ஆட்சிப் பரம்பரையை நம்மால் அறிய முடிகிறது. இவைகளில்லாவிட்டால் பழமையைப் பொறுத்த அளவில் நாம் குருடர்களாக அன்றோ இருப்போம்? ஆகவே சாசனங்களை, இருண்டு கிடந்த பழங்கால வரலாற்றை விளக்கிக் காட்டும் ஒளி விளக்குகள் என்று சொன்னல் குற்ற மாகாது.

"நாம் இங்கே சாசனம் என்று குறிப்பிடுவது கல்லெழுத்து, செப்பேடு, ஓலைப் பிரமாணம் முதலிய வற்றையாகும். பல நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட இச்சாசனங்களைப் படித்தறிந்து, அக்கால வரலாறு களையும் வழக்கங்களையும், அறிந்துகொள்வ தென்பது எளிதன்று. இதற்கு முதலாவது, அக்கால வரிவடி வங்களான வட்டெழுத்து, கோலெழுத்து, மலையாளம், கிரந்தலிபி போன்றவற்றில் நல்ல பயிற்சியும் பாண் டித்தியமும் வேண்டும். இரண்டாவது, தமிழிலக்கியத் தில் தேர்ச்சியும், சுற்றுப்புற மொழிகளில் ஓரளவு அறிவும் வேண்டும். மூன்ருவது, ஒரு காலத்தைப் பற்றி ஆராயப் புகும்போது அக்காலப் பழக்க வழக் கங்கள் இவையாயிருக்கலாம் என்றுணர்தற்கேற்ற பரந்து பட்ட அறிவு அமைந்திருத்தல் வேண்டும். நான்காவது, நாடோடிப் பேச்சு வழக்கைப் பற்றியும் அறிந்திருத்தல் வேண்டும். இவ்வளவுக்கும் மேலாகத் தன்னபிமானம் என்ற மாசு நீங்கி, உண்மை காண வேண்டுமென்ற ஆசை சுரக்கின்ற மனநிலை அமைந்

திருத்தல் வேண்டும். இவ்வளவும் பொருந்தப் பெற்றோரே சாசன ஆராய்ச்சிக்குத் தகுதியுடையோராவர்.

"இன்னோரும் சாசனங்களைப் படித்தறிவதிலும், பொருளுணர்வதிலும் தவறிவிடுதல் கூடும். 'யானைக்கும் அடி சறுக்கும்' என்பார்களே, அது சாசன ஆராய்ச்சியைப் பொறுத்தவரையில் நாற்றுக்கு நூறு உண்மை. அதனால், ஒருவர் தவறியதை இன்னொருவர், எடுத்துக் காட்டி உண்மையைப் புலப்படுத்த வேண்டுவது மிக்க அவசியம்"

இவ்வாறு சாசன ஆராய்ச்சியைப் பற்றியும், கவிஞர் பல கட்டுரைகள் எழுதியுள்ளார். திருவிதாங்கூர் சாசன ஆராய்ச்சி இலாகாவில் தலைமை வகித்து வந்த திரு. கோபிநாத ராயரவர்கள், சிறந்த அறிஞரும், ஆராய்ச்சியாளருமாவர். கவிமணி, அன்னவர் இடர்ப்பட்டுள்ள இடங்களையும் எடுத்துக் காட்டி உண்மையை நிலை நாட்டியுள்ளார். உடல் மெலிந்து, நடை தளர்ந்து, கோலூன்றித் திரிந்த கிழப் பருவத்தும்கூட, எவரேனும் புதிய கல்வெட்டுக்கள் கண்டதாகக் கூறின், உடனே அங்குச் சென்று அதனைப் பார்ப்பது அவரது வழக்கம். இவ்வாறு அருந்தொண்டாற்றி வந்தார் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை.

## நாட்டுப் பணி

நாட்டுக்குத் தொண்டாற்ற வேண்டுமென்பது கவிமணியின் பெரும் வேட்கையாம். "நாட்டு மக்கள்

நன்றாக வாழ வேண்டும்; நேரிய வாழ்க்கை நடத்த வேண்டும்; அவர்களிடம் காணப்படும் கண்மூடி வழக்கங்கள் அகற்றப்படல் வேண்டும் என்பவைகளில் அவர் பெரிதும் விருப்பம் உடையவராவர். 'தீண்டாமை' 'கதர் விற்பனை' 'நாட்டுக் கொடி' முதலிய பாடல்களில் அவரது தூய உள்ளத்தைக் காணல் இயலும். ஆயின், நாட்டுக்குத் தொண்டாற்றும் முறையில் அவருக்கு விடுதலை கிடைக்கவில்லை என்பதும் மறுக்கமுடியாத உண்மை. அடிமை நாட்டில், அடிமைத் தொழிலில் இருந்துகொண்டு எவ்வாறு நாட்டுப்பணி புரிய இயலும்? பாரதியார் புதுவை சென்று வாழ்க்கை நடத்தக் காரணம் என்ன? ஆட்சியாளரின் கொடுமை தானே! அடிமைத் தொழிலில் இருந்துகொண்டு நாட்டுக்கு எவ்வளவு பணியாற்ற இயலுமோ, அவ்வளவும் கவிமணி செய்தார் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை கவிஞராகவும், சிறந்த அரசியல் அறிஞராகவும் திகழலானர். இரவீந்திரநாத் தாகூர் கவிஞரே ஆயினும், சிறந்த அரசியல் அறிஞராகவும் மிளிர்ந்தார்; அரசியல் நிலைமை பற்றித் தமது கருத்துக்களையும் அவ்வப்போது வெளியிட்டார். கவிமணி அடிமைத் தொழிலில் ஈடுபட்டுப் பணி புரிந்ததால், அவருக்குத் தமது கருத்துக்களை வெளியிடும் வாய்ப்புக் கிடைக்கவில்லை. ஆயினும், நெருங்கிப் பழகும் நண்பர்களிடம் தமது கருத்தை அவர் வெளியிடுவ துண்டு. அவர் சிறந்த அரசியல் அறிஞர் என்பதைக் கவிமணியிடம் உரையாடிய அரசியல்

அறிஞர் நன்கு அறிவர். அவர் எப்பொழுதும் 'இந்து'த் (Hindu) தினத்தாள் பார்க்கத் தவறுவதில்லை. தினத் தாள்களில் அவர் விரும்பிப் படிப்பதும் இந்துவே ஆகும்.

வேலையிலிருந்து ஓய்வு பெற்று நீங்கிய பின்பும், கவிஞர் உடல் நலங்குன்றி நோயினால் நொந்தார். ஆகவே, அவர் அக்காலத்தில் அரசியலில் ஈடுபட்டுப் பெரும்பணி செய்வதற்கு இல்லை. அவர் நோயினால் நொந்து பாடிய சிரங்கு என்னும் பாடலைக் கண்ணுறும் எவரும் இரக்கம் கொள்ளாதிரார் என்பது உறுதி. எனினும், அவர் அரசியல்துறையில் ஒரு மாநாட்டுத் திறப்பாளராகப் பங்குகொள்ள லாயினர். இது மிகவும் இன்றியமையாத ஒன்றாகக் கருதப் படுகின்றமையால், இதனை இங்கு எடுத்துக் காட்டுவது ஏற்புடையதாகும்.

## தமிழகம்

தொல்காப்பியர் காலத்து வடக்கு வேங்கடமும், தெற்குக் குமரியாறும், கிழக்கும், மேற்கும் கடலும் எல்லையாகப் பெற்று விளங்கியது தமிழகம். 'வட வேங்கடந் தென்குமரி, ஆயிடைத் தமிழ் கூறு நல் லுலகம்' என்று தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம் கூறும். பிற்காலத்தில் தமிழ் நாடு சிதைவுற்று வரைந்து சுட்டும் எல்லையின்றித் தவித்தது. பின்பு ஆங்கில ஆட்சியாளர் தமது ஆட்சிக்குத் துணைபுரியும் பொருட்டு நாட்டைப் பல கூறுபடுத்தினர். நாடும் நிலை குலையலாயிற்று.

## காங்கிரஸ் திட்டம்

மொழி அடிப்படையில் மாகாணங்கள் அமைக்கப்படல் வேண்டும் என்பது காங்கிரஸ் வகுத்த திட்டங்களில் ஒன்றாகும். அத் திட்டப்படி மாகாண அமைப்புக்கள் நிறைவேறவில்லை. நாடு வறுமையால் நலிந்து, உண்ண உணவும், உடுக்க உடையும் இன்றித் தயங்கும் வேளையில், மொழியடிப்படையில் மாகாணம் அமைப்பது முதல் வேலை அல்ல; சிறிது காலந் தாழ்த்து அவ்வாறு அமைப்பது சிறப்பு" என்று அது அறிவுரை கூறியது. எனினும், மொழியடிப்படையில் மாகாண அமைப்புக்குரிய முயற்சிகளும் ஆங்காங்கு ஓரளவு நடைபெற்றன.

## தமிழ் மாகாணம்

தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில், தமிழ் மாகாண அமைப்புக்குரிய முயற்சிகளும் ஓரளவு நடைபெற்று வரலாயின. தொல்காப்பியர் காலத்துக் கண்டபடி, வடக்கு வேங்கடமும், தெற்குக் குமரியும் எல்லையாகக் கொண்டு தமிழ் மாகாணம் அமைக்கப்படல் வேண்டும் என்பது துணிவாயிற்று. இவ்வமைப்பிற்குச் சில இடர்ப்பாடுகளும் எழுந்துள்ளன. சென்னை நகர் தமிழர்கட்கு மட்டும் உரிமையுடையது அன்று; அதனைக் கூறுபோட வேண்டும் என்று ஆந்திரரும், திருவிதாங்கூரில் அமைந்திருக்கும் தமிழ் நிலப் பரப்பைத் தமிழ் நாட்டுடன் இணைக்க ஒருப்படோம் என்று மலையாளிகளும் முழங்குவாராயினர். திருவிதாங்கூரில் அமைந்துள்ள தமிழ் நிலப் பரப்பை

இணைக்காது, குமரியெல்லை ஏற்பட வழியில்லை. இங்கு உள்ள தமிழ் மக்களும், எப்பொழுது தமிழ்த் தாயகத்துடன் இணைவோம் என்று எதிர்நோக்கிய வண்ணம் கிளர்ச்சியும் செய்து வருகின்றனர்.

## எல்லை மாநாடு

இந் நிலையில், தமிழ் மாகாண எல்லை மாநாடு ஒன்று குமரித்துறையில் நடைபெறலாயிற்று. தமிழ் மக்கள் இன்பத்தால் உந்தப்பட்டுக் கிளர்ந்து எழுந்தனர். தமிழகம் உவகைக் கடலுள் ஆழ்ந்தது என்றே கூறல் வேண்டும். இப் பெரும் மாநாட்டின் திறப்பாளர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆவர். அப்பொழுது அவராற்றிய சொற்பொழிவு அவரது அரசியல் அறிவை உள்ளங்கை நெல்லிக்கனியென விளக்குவதாகும். குமரி தமிழ் நாட்டையே சாரும் என்பதனையும் அவர் தக்க சான்றுடன் எடுத்துக் காட்டுகின்றார். அதன் சுருக்கம் பின் வருமாறு :

" தலைவர் அவர்களே! பெரியோர்களே! இந்தப் புண்ணிய பூமியில் உங்கள் அனைவரையும் தரிசிக்கும் படியான ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது என் பெரும் பாக்கியமே ஆகும். இதனால் எனக்கு ஏற்படும் மகிழ்ச்சிக்கு அளவில்லை. எனக்கு அரசியல் துறையில் விசேஷ அனுபவம் ஒன்றுமில்லை. ஆயினும், திறப்புரையாக இரண்டொரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன்.

" பண்டைக் காலத்தில் தென் திருவிதாங்கோடு பல சிறு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஆய் நாடு,

தெங்கநாடு, படப்பநாடு, வள்ளுவநாடு, குறுநாடு, நாஞ்சில்நாடு, புறத்தாயநாடு என்பவை அவற்றுள் முக்கியமானவை. இவை யாவும் செந்தமிழ் நாடுகளே என்பதைப் பல சந்தர்ப்பங்களிலும் தக்க ஆதாரங் களுடன் விளக்கியுள்ளேன். ஆதலால், அதனைப் பற்றி இப்பொழுது விரிவாக ஒன்றும் கூறத் தேவையில்லை என்று விட்டொழித்து, தமிழ் மக்கள் அனைவரும் இன்று ஒருங்கு கூடியிருக்கும் இத் தென்குமரியைப் பற்றிச் சில விவரங்களை மட்டும் தெரிவிக்கத் துணி கிறேன்.

"இது பாண்டிய நாட்டைச் சேர்ந்த ஊர் என்பதில் யாதும் ஐயமில்லை. கல்லெழுத்துக்களில், இவ்வூரில் எழுந்தருளி யிருக்கும் தேவி, அடியில் வருமாறு குறிப்பிடப் பட்டிருக்கிறாள்:

> "ராஜ ராஜப் பாண்டி நாட்டு
> உத்தம சோழவள நாட்டுப்
> புறத்தாய நாட்டுக் குமரி
> கன்னியா பகவதியார்"

தேவி கோவிலும், சற்று வடபாலிருக்கும் குகநாதேசுவரர் கோவிலும் இங்கு முக்கியமான கோவில்கள். இரண்டிடங்களிலும் ஏறக்குறைய நூறு கல்வெட்டுக் களுக்கு மேல் காணப்படுகின்றன. அவற்றுள் இரண்டொன்றைத் தவிர, மற்றவை யாவும் தமிழ் மொழியில் பொறிக்கப் பட்டுள்ளவையே. குமரிக் கோவிலில் கொடிமரத்தின் பீடத்தைச் சுற்றிப் பொறிக்கப் பட்டிருப்பது விஜய நகர வேந்தருடைய கல்லெழுத்து.

"முதல் ராஜ ராஜ சோழனுடையது தான் இங்குள்ள கல்வெட்டுக்களில் மிகப் பழமையானது. ராஜேந்திர சோழன், ராஜாதி ராஜன் முதலியோருடைய கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன. வீர ராஜேந்திரனுடைய நீண்ட சாசனமொன்று, மணி மண்டபத்திலுள்ள கல் தூண்களில் பொறிக்கப்பட்டிருக்கின்றது.

"பராந்தக பாண்டியன், குலசேகர பாண்டியன் முதலான பாண்டிய மன்னர்கள் பலருடைய சாசனங்களும் இங்கே காணப்படுகின்றன. நாயக்க அரசர், சேர அரசர் என்பவர்களுடைய கல்லெழுத்துக்களும் சில உண்டு.

"மேற் குறித்த பராந்தக பாண்டியனுடைய கல்வெட்டு, இந்தக் கன்னியாகுமரி ஆலயத்தைத் தவிர வேறெந்த இடத்திலும் இருப்பதாக இது வரையில் கண்டறிந்த தில்லை. இதன் காலம் ஏறக்குறைய 850 ஆண்டுகளுக்கு முன்னராம். இதில் 'தேவியைத் தென்னவர்தம் குலதெய்வம்' என்று குறிப்பிட்டிருப்பது கவனிக்கத் தக்கது. பாண்டிய மன்னனுக்குக் குமரிச் சேர்ப்பன் என்பது ஒரு பெயர்.

"மேலே எடுத்துக் காட்டப் பட்டிருக்கும் கல்வெட்டுக்களாலும், தென் திருவிதாங்கோட்டில் வேறு பல பாகங்களில் காணப்படும் கல்வெட்டுக்களாலும் தென் திருவிதாங்கோடு ஓர் செந்தமிழ் நாடே என்பதும், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்தே—ஏன்? சரித்திர காலத்துக்கு முன்னிருந்தே தமிழர்கள் இங்கு வாழ்ந்து வருகின்றார்கள் என்பதும், பிறவும் தெள்ளத் தெளிய

அறியக் கூடியவையாம். இலக்கியங்களும் பழக்க வழக்கங்களும் இந்நாட்டவர் தூய தமிழர்களென்று காட்டுவதைத் தவிர, வேறெதற்கும் ஆதரவளித்து நிற்பதாய், நாமறிந்த வரையில் சொல்வதற்கில்லை.

## எப்படி வாழ்வது ?

"உண்மை இவ்வாறிருந்தும், ஒரு மேதாவி, 'திருவிதாங்கோட்டிலுள்ள தமிழர்கள் இடைக் காலத்தில் தோட்ட வேலைக்காக வந்த கூலியாட்கள்' என்று பிதற்றியிருக்கிறார். இப் பிதற்றலுக்குக் காரணம் அவருடைய அகங்காரக் காய்ச்சலோ, அறியாமை மயக்கமோ யான் அறியேன். உண்மையைச் சொல்கிறேன் கேளப்பா கேளப்பா என்றால் கேட்பதுமில்லை; ஆதாரங்களை எடுத்துக் காட்டிப் பாரப்பா பாரப்பா என்றால் பார்ப்பதுமில்லை. பொறாமையும், பேராசையுந்தான் கண்ணையும், காதையும் நன்கு மறைத்து விட்டனவே! இவர்களோடு எப்படி வழக்காடுவது ?

"இந் நாடு முழுமையும் தம்முடையது என்பதற்கு மலையாள நண்பர்களும் சில ஆதாரங்கள் காட்டுகிறார்கள். அவர்கள் காட்டும் ஒரு ஆதாரம் 'கேரளோற்பத்தி', 'கேரள மகாத்மியம்' என்னும் நூல்களில் சொல்லப்பட்டிருக்கும் ஒரு பாட்டி கதை. பரசுராமர் கோகர்ணத்திலிருந்து மழுவை எறிந்து கன்னியாகுமரியில் வீழ்த்தி 160 யோசனை தூரம் கடலை விலக்கிப் பிராமணர்களுக்குத் தானம் செய்த கதை அது. திரேதாயுகத்தில் நிகழ்ந்ததாகச் சொல்லப்படும் இந்தக் கதை கலியுகத்தில்—அதுவும் அனுகுண்டு சகாப்தத்

தில் சரித்திரப் பிரமாணமாக முன்னிறுத்தப்படுகிறது. இந்தப் பிரமாண நூல்களைப் படித்துவிட்டு, 'மலபார் அண்ட் அஞ்சங்கோ' என்ற நூலெழுதிய திருலோகன் என்பார், 'அவை பொருளற்ற புராணப் புளுகுகள்' என்றார்.

"இது ஓர் புரட்சிக் காலம். பன்னூறாண்டுகளாகச் சேர்ந்திருந்த நாடுகள் பிரிகின்றன. பிரிந்த நாடுகள் சேர்கின்றன. முடியாட்சி நீங்கிக் குடியாட்சி ஓங்கும் இக் காலத்தில் மக்கள் சாதி, சமய வேறுபாடுகளை ஒழித்து, மொழியால் ஒன்றுபட்டு வாழ்வதற்கு வகை யேற்படுவது இன்றியமையாதது. அதற்காகவே தெலுங்கர்கள் ஆந்திர மாகாணம் கேட்கிறார்கள். கன்னடர்களும் பிரிந்துபோக விரும்புகிறார்கள். கேரளீயர்களும் தனி மாகாணத்துக்கு அரும்பாடு படுகிறார்கள். இவ்வேளையில் தென் திருவிதாங்கோட்டிலும், செங்கோட்டையிலும், தேவி குளத்திலும், பீருமேட்டிலும் வாழும் தமிழர்கள் தங்களிடங்களையும் தாய்த் தமிழ் நாட்டோடு சேர்க்க வேண்டுமென்று கேட்பதில் குற்றமென்ன இருக்கிறது? 'பிரித்துவிட மாட்டோம்' என்று கேரளீயர் சொல்வதில் யாதொரு பொருளுமில்லை.

## தலைவர்களின் கடமை

"எந்தெந்த மொழியாளர்கள், அண்டையிலுள்ள தம் தாய்மொழிப் பகுதியோடு சேர விரும்பினாலும், அவர்களைப் பிரித்தும், சேர்த்தும் ஒற்றுமையாய் வாழத் துணை செய்வது தான், பொது நோக்கங் கொண்ட

சிறந்த அரசியல் தலைவர்களின் கடமையாகும். இதற்காகச் சரித்திரமும், புராணமும், சாசனமும், இலக்கியமும் புரட்டிப் பார்க்க வேண்டிய தேவையே இல்லை. கண்முன்னே காணும் உண்மையை நிரூபிக்க ஆதாரம் தேட வேண்டிய அவசியமுண்டா?

"திருவிதாங்கோட்டுத் தமிழர்கள் அண்டையிலிருக்கும் தாய்த் தமிழகத்தோடு இணைய விரும்புகின்றார்கள். தமிழ் நாட்டாரும் இவர்களைச் சேர்த்துக் கொள்ள ஆசைப்படுகின்றனர். இந் நிலையில் இவ்விரு சாராரையும் இணைத்து வைப்பதொன்றே ஆளும் அதிகாரிகள் கடமை. கேரளீயர் இதில் தலையிட்டுக் கலைக்க முயல்வது ஒரு சிறிதும் நியாயமாகாது.

"பிரிவினைக் கேற்ற காலம் இதுவன்று; அதற்கு அமைதியான சூழ்நிலை வேண்டும்" என்று பெரிய அரசியல் தலைவர்கள் சொல்கிறார்கள். உலகப் போக்கை உற்றுப் பார்த்தால், அமைதி அண்டையிலிருப்பதாகத் தெரியவில்லை. உலகில் என்றும் கொந்தளிப்பும், குமுறலும் இருந்து கொண்டுதானிருக்கும். அவை நீங்கிய பின் பிரிக்கவோ சேர்க்கவோ செய்வலாமென்பது, திரை நீங்கித் தீர்த்த மாடலாமென்று சொல்வதற்குச் சமமாகுமே தவிர வேறில்லை.

"தமிழர்கள் ஏன் பிரிந்து போக வேண்டும்? 'வேற்றுமை யுணர்ச்சியின்றி இன்று போல் என்றும் இருந்தால் என்ன?' என்று சிலர் கேட்கிறார்கள். 'நாம் மலையாளிகள்; மலையாளப் பகுதிகள் அனைத்தும் ஒன்றாகத் திரட்டி ஓர் மலையாள மாகாணம் அமைக்க

வேண்டும் என்று மலையாளிகள் என்று கருதிவிட்டார்களோ, அன்றே வேற்றுமை யுணர்ச்சி வேரூன்றி விட்டதல்லவா? அதற்கு மேல், சிறுபான்மைச் சமூகத்தாரான தமிழர்கள் ஆட்சியாளர்களின் தயவை எதிர்பார்த்து வாழ்வதைத் தவிர, நியாயமான உரிமையைப் பெற்று வாழ முடியுமா? இச் சந்தேகம் அவர்கள் உள்ளத்தில் எழுவது இயல்புதானே. இது வெறும் சந்தேகமா? இல்லை. உண்மையு மாகிவிட்டது, அதற்குள் தமிழர்கள் இகழப்பட்டு விட்டார்கள். இதை நிரூபிக்க எத்தனையோ சான்றுகள் தர முடியும். இன்று, 'திருவிதாங்கோடு முழுமையும் ஒரே நாடு, ஒரே நாடு' என்று சொல்வதெல்லாம் குப்பிக்குள் தண்ணீரும், எண்ணெயும் நிறைத்துக் கார்க்கினால் இறுக மூடி, ஒன்றெனக் காட்டுவதற் கொப்பே யன்றி வேறில்லை. உண்மை யாவரும் அறிந்ததே.

"இப்பொழுது நாம் சுதந்திரம் பெற்றிருக்கிறோம். நம் நாடு குடியரசு நாடாகப் போகிறது. இனி வயது வந்தோர்க் கெல்லாம் வாக்குரிமை யுண்டு. வாக்குரிமை யுடைய ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு மன்னனாகின்றான். ஆதலால், அவன் அபிப்பிராயத்துக்கு விலையுண்டு; மதிப்புண்டு. அவ் வபிப்பிராயங்கள் ஒரு முகப்படாது பல்வேறு வகையாகப் பிளவுபடும் போது, பெரும்பான்மை, சிறுபான்மை முறை கையாள வேண்டியதாகின்றது. அதிகாரத்துக்கு வந்த பெரும்பான்மைக் கட்சியினர், சிறுபான்மையோரின் நலத்துக்கு ஊறு செய்து, அவர்கள் கூக்குரல் வெளிக்

கிளம்ப வொட்டாமல் தடுத்து, அவர்களை அடக்கி, ஒடுக்கி மிதித்து வைப்பதற்கும் இது உதவக் கூடும். பெரும்பான்மையினர் எனப்படுவோர், இந்த வகைக்குத் தம் அதிகாரத்தைப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது. அது பெரும் பாதகமானது; ஆபத்தானதும் கூட. ஆதலால், ஆட்சியாளர்கள் சிறுபான்மையோர், பெரும்பான்மையோர் என்னும் பேதமின்றி யாவர்க்கும் ஒத்த நீதிவழங்கி, மனக் கசப்பைப் போக்கி, வளமுள்ள பல மாகாணங்களை அமைப்பார்களாக. அவைகளெல்லாம் வலிமைமிக்க தூண்களாக நின்று, நம் பாரத சமுதாயத்தைத் தாங்கட்டும். இதற்கு வேண்டிய பொது நோக்கும் நேசப்பான்மையும் மக்களிடையே உண்டாகட்டும்.''

## அறிவுரை

அரசியலில் கவிமணி பலருக்கும் அறிவுரையும் நல்கினர். திருவிதாங்கூர்த் தமிழ்நாடு காங்கிரஸ் பொதுக் காரியதரிசியாகப் பணியாற்றியவர், திரு. ஆர். கே. இராம் என்பவர். இவர் உயர்குடிப் பிறப்பினரும், பெரும் அரசியல் அறிஞரும், தன்னலமற்றவரும், நாட்டுக்குத் தொண்டு புரியும் நன்னோக்கமுடையவரும் ஆவர். இவர், தாம் சட்டசபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட போது, கவிமணியைக் காண்பதற்குச் சென்றார். அப்போது கவிஞர் அவருக்கு அறிவுரை ப்கருகையில், "நின் போன்ற இளைஞர் சட்டசபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது பற்றி நான் மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன்; நீயோ, சபைக்குச் செல்வதற்கு ஏற்ற திறமையும்,

அரசியல் அறிவும் உடையவன். உனக்கு நான் சொல்ல வேண்டுவது ஒன்றுமில்லை. ஆயினும், நீ முதன் முறையாகச் செல்வதால், ஒன்று மட்டுஞ் சொல்ல விரும்புகின்றேன். சபையைக் கண்டோ, அங்குள்ளோர் அறிவு படைத்த பெரும் பெரும் புலிகள் என்றோ அச்சங்கொள்ள வேண்டுவதில்லை. பொதுவாக எல்லோருக்கும் பொருளறிவு ஒன்று போலவே இருக்கும். ஆகவே அங்கு நடைபெறும் நிகழ்சிகளை ஊன்றிக் கவனித்து, ஏனைய உறுப்பினர்கள் தெரிவிப்பதைக் கொண்டே, அவர்கட்குச் சுடச் சுட விடை கொடுத்து விடவேண்டும். எனவே, மற்ற உறுப்பினர்கள் 'என்ன கூறுகின்றார்கள்' என்பதை நன்றாக மனத்தில் நிலை நிறுத்திக் கொள்ள வேண்டும்" என்றார்.

இதனை நோக்கும்பொழுது, லார்டு செஸ்டர்பீல்டு (Lord Chester-field), தமது புதல்வனுக்கு வரைந்த கடிதம் சிந்தனைக்கு வருகின்றது. அவர், சட்டசபையைப் பற்றி மைந்தனுக்கு அறிவு கொளுத்தும்போது, "அஞ்சவேண்டுவதில்லை; பொருளறிவு எல்லோருக்கும் பொதுவானது; அதனை வெளிப்படுத்தும் முறையே வேண்டற் பாலது. ஒரு மேசையைச் சூழ்ந்திருந்து தேநீர் அருந்தும்போது, அங்கு நிகழும் ஒரு உரையாடலைப் போன்றதே சட்ட சபை நிகழ்ச்சியும். ஆகவே அஞ்சவேண்டா" என்று வரையலானார். இவ்விரண்டு அறிவுரைகளையும் ஒப்ப நோக்கும் பொழுது, கவிமணியின் அரசியல் அறிவு எவ்வளவு வளர்ந்து பண்பட்டுள்ளது என்பது தெளியலாகும்.

## பாடப் புத்தகக் குழு

திருவிதாங்கூர் அரசினர், முதல் ஐந்து வகுப்புக்களுக்குரிய தமிழ்ப் பாடப் புத்தகங்களைத் தாங்களே வெளியிடத் துணிந்தனர். எனவே, அவ் வகுப்புகளுக்குரிய பாட நூல்கள் எழுதும் பொருட்டு, அறிஞர் குழு ஒன்று அமைக்கப்பட லாயிற்று. கல்வி இலாகாத் தலைவரே, அக் குழுவிற்குத் தலைவராக இருந்தார். கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராக விளங்கிய திருவாளர் இராவ்சாகிப் மு. இராகவையங்கார், மனோன்மணீய நூலின் ஆசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களின் புதல்வரும் அறிஞருமாகிய பி. எஸ். நடராச பிள்ளை முதலியோர் அக் குழுவின் உறுப்பினராகப் பணியாற்றினர். கவிமணி நோயால் பீடிக்கப்பட் டிருந்தமையால், பெரும்பாலும் புத்தேரியிலேயே குழுவின் கூட்டங்கள் நடைபெற லாயின. இளைஞர்கட்கு ஏற்ற முறையில், இனிய புத்தகங்கள் எழுதும் பணியில், கவிஞர் ஆற்றிய அருந்தொண்டு அளவிடற்கு அரியதாகும். இப்பொழுது திருவிதாங்கூர்த் தொடக்கப் பள்ளிகளில், இக் குழுவினரால் எழுதப்பட்ட நூல்களே, தமிழ்ப் பாடப் புத்தகங்களாக இருந்து வருகின்றன.

மேற்கூறிய பலவற்றினின்றும் நாட்டுக்குத் தொண்டாற்றுவதில் கவிமணி அளவு கடந்த வேட்கை உடையவர் என்பது நன்கு புலனாகும். ஆனால், அவருக்கு ஏற்பட்ட நோயினால் அவரது தொண்டில் பெரும் பகுதியைத் தமிழ் நாடு இழக்க நேர்ந்தது

என்று கூறலாம். நோயினல் மனம் நொந்து, பணி யாற்ற முடியாது வருந்தினர் கவிமணி. அவர் நோயி ஞல் பீடிக்கப்பட்டு நோவாது இருந்திருந்தால், இன்னும் எத்துணையோ அருந்தொண்டுகள் ஆற்றி யிருப்பர் என்பது திண்ணம். எனினும், அவர் ஆற்றி யிருக்குந் தொண்டு அளவிடற்கு அரியது. அதற்குத் தமிழகம் பெரிதும் கடமைப் பட்டுள்ளது.

---

# 7. கவிமணியின் மறைவு

## சிரங்கு

தமிழகத்துக்குப் பல்லாற்ருனும் தொண்டு புரிந்த கவிமணி தமது முதுமைக் காலம் முழுமையும் நோயால் வருந்தினுர். அவர் சிரங்கு நோயால் துன்புற்றகாலை உண்ட மருந்துகட்கும், வாரம் முடங்காமல் தேய்த்த வைப்பெண்ணெய்கட்கும் அளவில்லை. எனினும் சிரங்கின் வீரம் தணிந்தபாடில்லை. பின்னர்த் திருச்செந்திலாண்டவனைப் பாடி அவனருளால் அந்நோய் நீங்கப் பெற்றூர்.

வார முடங்காமல் வைப்பெண்ணெய் தேய்த்திட்டேன்
சார மருந்தெல்லாம் சாப்பிட்டேன்—வீரம்
குறைந்திடக் காணேன்; குமரா! சிரங்கு
மறைந்திடத் தாரீ வரம்.

சிரங்குகளிலே சில சீழ் கோத்தவை யாயும், வேறுசில நீர்கோத்தவையாயும் மற்றுஞ்சில செங்குருதி கோத்தவையாயும் இருந்தன. கவிமணி இவை ஒவ்வொன்றையும் ஒவ்வொரு வகை மணிகளாகக் கண்டனர். இவையனைத்தும் சிரங்கப்பன் என்னும் அரசனல் தமக்கு வரிசையறிந்து தரப்பட்ட பரிசில் என்று கொள்ளலாயினர்.

முத்துப் பவழம் முழுவயிரம் மாணிக்கம்
பத்தியொளி வீசு பதக்கமெல்லாம்—சித்தன்
சிரங்கப்ப ராயன் சிறியேன் எனக்குத்
தரங்கண்டு தந்த தனம்.

என்று கூறுவதுங் காண்க.

## வாழ்வில் வெறுப்பு

பின்னர், கவிமணி எக்ஸிமா, ஆஸ்த்மா என்னும் பிணிகளாலும் பெருந் தொல்லை அடையலானார். ஆயினும், அவர் சாவுக்கு அஞ்சியவர் அல்லர். அவருடைய நண்பராகிய பண்டித மணி கதிரேசச் செட்டியார் விண்ணாடு சென்ற செய்தி கேட்டு உள்ளம் வருந்தலானார். அவ்வமயம் அவ்வருத்தத்தில் முகிழ்த்த பா மலர்களில் ஒன்று எல்லோருடைய உள்ளத்தையும் உருக்கும் இயல்பு வாய்ந்து காணப் பெறுகின்றது. அப் பாடலில், கவிமணி தமக்கு இவ்வுலக வாழ்விலுள்ள வெறுப்பையும் புலப்படுத்துவதோடு, அவர் என்று வருவான் எமன் என்று எதிர் நோக்கிய வண்ணமே இருந்தனர் என்பதும் வெளிப்படும்.

> "என்று வருவான் எமனேன்(று) எதிர்நோக்கி
> நின்று தளர்கின்றேன் நித்தமுமே—மன்றில்
> நடங்கண்ட ஈசன் நடராசன் பாதத்
> திடங்கண்டு வைநீ எனக்கு."

## சரமகவி பாடல்

அவரது இறுதிக் காலத்தில் அவருக்குப் பேரிடி போன்று துன்பந் தரத்தக்க பிறிதொரு நிகழ்ச்சியும் ஏற்படலாயிற்று. அது அவரது ஆருயிர் நண்பராகிய டி. கே. சிதம்பரநாத முதலியார் மறைந்த செய்தியே ஆகும். கவிமணி அச்செய்தி அறிந்து துடிதுடிக்கலாயினர். அவரது உள்ளத் துடிப்பை எச்சொல்லால், எவ்வெழுத்தால் ஏழையேன் இங்கு எழுத இயலும்! முதலியார் தம்பால் காட்டிய அன்பை எண்ணி

எண்ணி ஏங்கினர்; 'இனி உன்னை எங்கே காண்பேன்' என்று கதறினர்; 'ஐயனே! பண்பமைந்த பாவின் நயமறிந்து பாராட்ட இனியாவர் இருக்கின்றார்' என்று இரங்கினர்; 'நான் நோயால் வருந்தி நொந்து துடி துடிக்க, நீ மட்டும் என்னை விட்டு விண்ணுலகு சென்றனையே! உத்தமனே! இது உன் நட்புக்கு அடுக்குமோ' என்று புலம்பினர்; 'உன்னைப் பிரிந்து நின்று சரமகவி பாடுவதற்கோ நான் இத்தனை நாள் இவ்வுலகில் வாழ்ந்திருந்தேன்' என்று சிந்தை நொந்தார்.

"அன்னைபோல் என்னை அருவியில் நீராட்டி
இன்னமுதும் பக்கத் திருந்தூட்டி—தன்னோடு
தங்குதங் கேன்றுசொன்ன தங்கக் குணத்தானை
எங்குநான் காண்பேன் இனி?

என்னருமை நண்பா இனிய கலைரசிகா
தன்னிகர் இல்லாத் தமிழ்ச்செல்வா—மன்னுமுளம்
தத்தளித்து நின்று சரமகவி பாடுதற்கோ
இத்தனை நாள் வாழ்ந்திருந்தேன் யான்!"

## கவிமுகில் மறைந்தது

இறுதியாக 1954-ம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 26-ம் நாள் அன்பின் அரசாகவும்—அறத்தின் அணி யாகவும் அறிவின் வரம்பாகவும்—அமைதியின் உருவ மாகவும் திகழ்ந்த கவிமணி இம்மண்ணுலகினின்றும் மறையலானர்.

அந்தோ! தமிழர் உள்ளத்தே கோவில்கொண்ட பெருமான்—சேரநாட்டின் செந்தமிழ்க் கவிஞன்—

நாஞ்சில்தாய் பெற்ற நற்றமிழ்ப் புலவன்—புத்தேரிப் பூங்காவில் இசைபாடிக் களித்துக் கொண்டிருந்த இன்னிசைக்குயில் மறைந்த செய்தி கேட்டுத் தமிழ் மக்கள் ஆறாகக் கண்ணீர் வடிக்கலாயினர்; கவிஞரும், கலைஞரும் கதறிக் கலங்கலாயினர்; அறிஞரும் அன்பு மனம் படைத்தோரும் ஆறாத் துயரத்துள் ஆழ்ந்தனர். அந்தோ! எங்கள் தாத்தாவை 'இழந்தோம்' 'இழந்தோம்' என்று பச்சிளங் குழந்தைகளும் வாடிக் குழைந்தன. கவிதை மழை பொழிந்த கவிமணி கண்ணீர் மழையால் நனையலாயினர்.

பல்லாயிரக் கணக்கான மக்கள் புடை சூழ அந்த உத்தமரின் உடலம் நன்காட்டிற்கு எடுத்துச் செல்லப் பட்டது. ஆங்குத் தமிழ்ப் பேரறிஞர், எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களின் தலைமையில் இரங்கற் கூட்டமும் நடைபெற்றது. அந்தோ! அருமைக் கவிமணியின் உடலும் நெருப்பிற்கு இரையாயிற்றே!

பின்னர்த் தமிழ்நாடு எங்கணும் எண்ண இயலாத அளவிலே இரங்கற் கூட்டங்கள் நடைபெறலாயின. கவிமணி அழியாத கவிதைச் செல்வத்தைத் தந்து அழியாப் புகழைப் பெற்றார் என்று உயர்திரு. இராசகோபாலாச்சாரியாரும் மொழிந்தார். செய்தித் தாள்கள் 'வெண்பாப் புலி' மறைந்தது என்றும், குமரிக்குயில் இனிக்கூவாது என்றும் தலையங்கங்கள் தீட்டலாயின. பொதிகையும் சாய்ந்ததோ? தென்றலும் ஓய்ந்ததோ? கவிமுகிலும் மறைந்ததோ? என்று கவிஞர்களும் கண்ணீர் வடித்தனர். கவிமணியைக் காண்பதென்றோ? என்று ஓவியர்களும் உள்ளம்

நொந்தனர். அன்புக் கவிமணியை—ஆர்ந்த கலைமணியை—கன்னித் தமிழ்மணியை—எந்த நாள் காண்போம்?, எந்த நாள் காண்போம்? என்று அறிஞர்களும் பிறரும் அகம் நொந்து வெந்தனர். என்னே கூற்றுவனின் ஆற்றல்!

கவிமணியைக் கூற்றுவன் நம் முகக் கண்ணினின்றும் மறைத்தான். ஆனல் நம் அகக் கண்ணினின்றும் மறைக்கும் ஆற்றல் அவனுக்கும் இல்லை. கவிமணி இன்றுந் தமிழ் மக்களின் உள்ளக் கோவில்களிலே ஏற்றிவைத்த ஒளி விளக்காகவே விளங்குகின்றார். மறைந்தும் மறையாத கவிமணியை—செந்தமிழ்த்தாயின் செல்வப் புதல்வனை — பாடும் மணிக் குயிலை—வெண்பாப் புலியை—வித்தகனை நாம் நித்த நித்தம் நினைந்து, அப் பெருந்தகையின் சொற்படி நடந்து, குணமென்னும் குன்றேறி நின்று, நல்வாழ்வு வாழ்வோமாக!

---

# 8. குண நலன்கள்

## வாழ்க்கைப் படிப்பு

'மனிதன் மனிதனைப் பற்றிக் கற்றல் வேண்டும்' என்று அறிஞர் கூறுவது, பொருட் பொலிவு நிரம்பப் பெற்றது ஒன்றாகும். ஒருவன் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளைக் கற்பதால், அவர்களின் சிறந்த வாழ்க்கையைப்பற்றி ஆராய்கின்றான்; 'அவர்கள் பெரியார்களாக விளங்குவதற்குத் துணை புரிந்தன யாவை? அவர்கள் கைக்கொண்ட பழக்க வழக்கங்கள் எவை? உலகம் அவர்களைப் பெரியார்கள் என்று போற்றக் காரணம் என்ன?' என்று இவை களையும் அறிகிறான். அப்பொழுது அவனும் அப் பழக்க வழக்கங்களைக் கைக்கொள்ள விழைந்து, அதற்கு ஏற்ப ஒழுகுவதால், அவனது வாழ்க்கை சீர்திருத்தம் பெறுகின்றது; தீய பழக்கங்களும் அவனை விட்டு அகல்கின்றன. அவன் உலகத்திலுள்ள மக்களிடம் அவர்களின் பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப நடந்து கொள்கின்றான்.

## நோக்கம்

இப் பெற்றிய பெரு நோக்கத்துடனேயே வாழ்க்கை வரலாறுகள் வரையப்படுகின்றன. ஆகை யால், வாழ்க்கை வரலாற்றில் ஒருவனை நன்னெறிக் கண் நிறுத்தும் பண்புகள் காணப்படல் வேண்டும். அன்றி அவர் பிறந்தார் — வளர்ந்தார் — வாழ்ந்தார் என்று வரைவதால் பயன் ஒன்றுமில்லை. ஒருவரின்

வாழ்க்கையில் அவர்கள் அடைந்த வெற்றியும், தோல்வியும், அவற்றிற்குரிய கருவிகளும் இவைகள் என்று அறிவதால், அதனைப் படிக்கும் ஒருவன் தனது வாழ்க்கையைச் சீர்திருத்த அஃது உதவுகின்றது.

## வெற்றி வாழ்க்கை

மேலே காட்டியவைகளால் ஒருவரின் வாழ்க்கையை வரைவதானல், அவர்களின் வாழ்க்கையைப் படிப்பவன் சீர்திருத்தம் பெறுதற்குரிய பண்பாடுகள் அதனில் நிறைந்து காணப்படல் வேண்டும். அன்றி முகமன் கூறுவதாலோ, இல்லாத பண்புகளை எழுதிப் புகழ்வதாலோ சிறப்பொன்றும் எய்துவதில்லை. கவிமணியின் வாழ்க்கையில், ஒருவன் சீர்திருத்தம் பெறுதற்குரிய பண்பாடுகள் மலிந்து காணப்பட்டன. அவர் வாழ்க்கையினின்றும் கற்றுக்கொள்ள வேண்டிய பல சிறந்த குண நலன்கள் தென்பட்டன. அஃதுடன், அவரது வாழ்க்கை மக்களை நல்வழிப் படுத்தவும் உதவுகின்றது. எனவே, கவிமணியின் வாழ்க்கை ஒரு வெற்றி வாழ்க்கை அன்றோ!

## வாழ்க்கை அழகு

கவிமணி எளிய வாழ்க்கையை நடாத்தினர் என்பது கண்கூடு. வீண் பகட்டுக்களில் அவர் தமது காலத்தைச் செலவு செய்யவில்லை; பட்டுத் துணிகள் அணிந்து கொள்வதில் அழகு இருப்பதாக அவருக்குத் தோன்றவில்லை. பெரும்பான்மையோர் பட்டாடைகள் அணிந்து கொள்வதில் அழகு இருப்பதாக நினைக்கின்றார்கள்; விலையுயர்ந்த மேலாடைகள் போர்த்திக்கொள்

வதில் அழகு இருப்பதாக எண்ணுகின்றார்கள்; கற்கள் பதித்த விரற்செறிகள் - தங்கத்தால் இழைக்கப் பெற்ற அணிகள்—அணிந்து கொள்வதில் அழகு இருப்பதாகக் கருதுகின்றார்கள். அறிவற்ற உலகமும் இதனையே 'அழகு, அழகு' என்று கொண்டாடுகின்றது. ஆயின், கவிமணிக்கு இவையெல்லாம் அழகு என்று தென்படவில்லை. கவிமணி கல்வி அழகையே அழகாகக் கண்டார். 'கல்வி அழகே அழகு' என்னும் குமர குருபரரின் உள்ளமே, கவிமணியவர்களின் உள்ளமாம்.

## எளிய வாழ்க்கை

கவிமணியை எப்பொழுது நோக்கினும், ஒரு மெல்லிய தூய வெண்மையான ஆடையை அணிந்தவராக— படுக்கையில் ஒரு தலையணைமீது தலைவைத்தவராக— கையில் ஏதேனும் ஒரு தினத் தாளுடனே, அல்லது ஒரு நூலுடனே காணப்படுவார். பிள்ளையவர்களின் அறையில் பஞ்சணை மெத்தையோ, பட்டாடையோ காண்டல் இயலாது. எளிய வாழ்க்கையிலேயே அவர் இன்பத்தைக் கண்டார். பஞ்சணை மெத்தையில் துயில்வதற்கு ஏற்ற செல்வச் செழிப்பும், அழகான மாட மாளிகை போன்ற மனைகள் கட்டி வாழ்வதற்கு ஏற்ற நிலையும் அவருக்கு உண்டு. ஆயினும், அவர் இவையொன்றையும் விரும்பாது, 'உறைவதற்குத் தக்க வீடும், உடுத்துவதற்கு வெள்ளிய ஆடையும், உண்பதற்கு இனிய உணவும், படிப்பதற்குக் கம்பன் கவிதையும் வேண்டும்' என்று இவைகளையே விரும்பினர். எத்தகைய வீண் பகட்டுக்களையும் அவர்

விரும்பியவர் அல்லர்; பொழுதைக் கொன்னே போக்கியவரும் அல்லர்; காலத்தின் அருமையை உணர்ந்து நடந்தவர்; வருவார், போவார்க்கு ஊண் கொடுத்துச் சிற்றுண்டி நல்கிக் களிப்பதில் பேருவகை கொண்டவர். விருந்து ஓம்பலால் அவருக்கு ஏற்படும் பெரு மகிழ்வை அளவிட்டு உரைக்க இயலாது. விருந்தினரோடு உரையாடிக் களிப்பதிலும், அவருக்குச் சலிப்பு ஏற்படுவதே இல்லை. சிறியர், பெரியர், ஏழை, செல்வர் என்ற வேற்றுமை மனப்பான்மையை அவரிடத்திற் காண இயலாது.

## கவிஞரின் புலமை

கவிமணி இத்தகைய எளிய வாழ்க்கையை நடத்தினும், அவர் ஆழ்ந்து அகன்ற புலமை நிரம்பியவர்; சிறியர், பெரியர், ஏழை, செல்வர் ஆகிய அனைவருக்கும் ஏற்ற உரைகள் பகரும் திறமும் உடையவர். அவர் அறிஞர்கட்கு அறிஞராகவும், கவிஞர்கட்குக் கவிஞராகவும், அரசியல் அறிஞர்கட்கு அரசியல் அறிஞராகவும் விளங்கினர்; நடிகர்கட்கு நாடக ஆசிரியராகவும், இசை வாணர்கட்கு இசைச் செல்வராகவும் இலங்கினர்; சிற்பத் துறையிலும், ஓவியத் துறையிலும் வல்லுநராகத் திகழ்ந்தார். ஓவியத் துறையில் கவிமணி அளவிறந்த வேட்கை யுடையவர் என்பது குறிப்பிடத்தக்கது. கவிஞர்கட்கு ஓவியத்தில் விருப்பம் எழுவது இயற்கை போலும்! உலகப் புகழ் படைத்த கவிஞர் இரவீந்திர நாத் தாகூர், சென்னை அரசவைக் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை முதலியவர்களும், ஓவியத் துறையில் பெரிதும் விருப்பம் உடையவர்களே ஆவர்.

## ஒரு மகான்

எல்லோரையும் ஒருப்போன்று எண்ணி ஒழுகும் உயர்ந்த பண்பாடு பிள்ளையவர்களிடம் சிறந்து காணப் பட்டது. 'கவிகளுள் அவர் ஒரு மணி' என்றால், 'மனிதர்களுக்குள் அவர் ஒரு மகான்' என்று திரு *எம். கே. பாவா அவர்கள் தமது நூலில் நயம்படக் குறித்துள்ளதை ஈண்டு எடுத்துக் காட்டுவது சாலவும் பொருத்தமானதே. இக் கூற்று உண்மையே யன்றிப் புனைந்துரை அன்று. இதன் உண்மை யின்மைகளைக் கவிமணியை நேரிற் கண்டவர் நன்கு அறிவர்.

## அன்பு உள்ளம்

கவிமணியவர்களிடம் வாய்மை, வீரம், அன்பு, அடக்கம், ஒழுக்கம், புறங்கூறாமை, தன்னலம் பேணாமை முதலிய பெருங்குணங்கள் அமைந்திருந்தன. கவிமணியைப் பொறுத்த அளவில், பொறாமைக் குணம் ஒன்று உலகில் உண்டு என்று கூறவே இயலாது. அன்பிலேயே உயிர் இருப்பதாக நினைப்பதோடு, உலகமே அன்பினால் இயங்குகின்றது என்பதும் அவரது கருத்தாகும். எப்பொழுதும் அன்பைப் பற்றிப் பெருமையாகப் பேசுவதுடன், 'அன்பால் உலகத்தையே நமக்கு உரிமை ஆக்கி விடலாம்' என்றும் அவர் கூறுவர். அன்பிற் சிறந்தது பிறிது இல்லை என்பது பிள்ளையவர்களின் உயரிய கொள்கை. அன்பைக் குழைத்து அமுதாகத் தருகின்ற இனிய சொற்களே அவரிடமிருந்து வெளிப்படும்.

---

* இவர் இப்பொழுது திருவிதாங்கூர்த் தமிழ் நாடு காங்கிரசின் செயலாளராகப் பணியாற்றுகின்றார்.

" இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று "

என்னும் அருமைத் திருக்குறளுக்கு இலக்கியமாக அமைந்தது பிள்ளையவர்களின் வாழ்க்கை.

" அன்பு செய்யின் அயலாரும்
அண்டி நெருங்கும் உறவினராம் ;

அன்பு நீங்கின் உறவினரும்
அகன்று நிற்கும் அயலாராம் "

என்று கவிமணியே கூறுகின்றார்.

அவரிடம் நிலைபெற்ற இந்த அன்பு உள்ளமே, அவரை 'மீராவின் வெற்றி' 'கருணைக் கடல்' என்பவைகளை இயற்றச் செய்தது; சிறுவர்களுக்காகப் பாடல்கள் பல இயற்றவும் துணைபுரிந்தது என்னலாம்.

வெண்சங்கு போன்று நரைத்த தலைமயிரும், கருணை வெள்ளம் பெருக்கெடுத்துப் பாய்ந்து கொண்டிருக்கும் கள்ளங் கபடமற்ற குழந்தை உள்ளமும், கல்விப் பரப்பின் ஒளி காலும் அகன்ற நெற்றியும், அருளொழுகும் கலக்க மறியாத குழந்தைக் கண்களும் படைத்து, அன்பே திரண்டு ஒரு உருவெடுத்தாற் போன்ற அன்பு வடிவமே கவிமணியின் வடிவமாகும்.

" துரும்பென மெலிந்த தேகம்
துலங்கிடும் குளிர்ந்த பார்வை

இரும்பினும் வலிய உள்ளம்
இனியவே செய்யும் எண்ணம்

பரம்பொருள் நினைவே காட்டும்
பாரெலாம் பரந்த நோக்கம்

கரும்பினும் இனிய சொற்கள்
கவிமணி வடிவ மாகும் ”

என அரசவைக் கவிஞர் நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்கள், கவிமணியின் வடிவத்தைப் படம் பிடித்தாற் போன்று ஒள்ளிய சில சொற்களில் தெளிவாக் காட்டுவதும் காண்க.

## ஊக்கும் ஆற்றல்

இளங் கவிஞர் பலர், கவிமணியவர்களிடஞ் சென்று, தாங்கள் இயற்றிய கவிதைகளைப் படித்துக் காட்டித் திருத்தங்கள் பெற விரும்புவர். கவிமணியும், அவர்களின் பாடல்களை ஊன்றிக் கேட்டு, வழுக்கள் இருப்பின், அவைகளை எடுத்துக் காட்டி அன்பு முறையிலே திருத்துவார். இதனால், இளங் கவிஞர் புத்துணர்ச்சியும், புதிய ஊக்கமும் பெறுவர். இவ்வாறு திருத்தும் அன்பு முறையை, பெற்ற தாய் தந்தையர்களிடமுங் கூடக் காண்டல் இயலாது.

கவிஞர் திருத்திய அன்பு முறையால், இன்று நாஞ்சில் நாட்டில் எழுச்சி பெற்றுத் தோன்றிய இளங் கவிஞர்களும், எழுத்தாளர்களும் பலராவர். அவர்களுள் சிறப்பாகக் குறிக்கத் தக்க பெருமை வாய்ந்தவர், இளங்கவிஞராகிய தே. ப. பெருமாள் என்பவராவர்.

வித்துவான், செ. சதாசிவம் அவர்களும் கவிஞரின் ஊக்கத்தால் ஆக்கம் பெற்றவரே ஆவர். அவர் ‘சேரநாடும் செந்தமிழும்’ என்னும் நூலை எழுதி முடிப்பதில், கவிஞர் பேருதவி புரிந்து ஊக்கியமையும், இங்குச் சிறப்பாக எடுத்துக் காட்டத் தக்கதாகும்.

## இலக்கிய உலகம்

கவிமணியின் வாழ்க்கை இலக்கிய உலகிற்கே சிறப்பைத் தந்தது என்று கூறுவது மிகையன்று. அவர் தமிழ் இலக்கியங்களை நுணுகி ஆராய்ந்தார்; ஆயின் அவற்றை மட்டும் போற்றிப் போற்றி உயிர் வாழ்வதை அறவே வெறுக்கலானார்; இலக்கிய உலகம் எவ்வாறு ஆக்கம் பெறல் வேண்டும் என்பதையும் துருவி ஆய்ந்தார்; இதன் பொருட்டு எத்தனையோ ஏட்டுச் சுவடிகளை அரிதின் முயன்று திரட்டினார்; சுசீந்திரம், கன்னியாகுமரி முதலிய இடங்களிலுள்ள கோவில்களுக்குச் சென்று, அங்குள்ள சிற்பங்களை நோக்கித் தமிழ் நாட்டவரின் சிற்பத் திறனை வியந்து போற்றினார்; ஆண்டுள்ள கல்வெட்டுக்கள் பற்றியும் ஆராய்ச்சி நிகழ்த்தினார். பிள்ளையவர்கள், தாம் தேடிக் கண்ட எத்தனையோ ஏட்டுச் சுவடிகளைத் திருவனந்த புரம் பல்கலைக் கழகத்திற்கு ஈந்து உதவினார். ஏட்டுச் சுவடிகள் திரட்டும் முயற்சியில் ஈடுபட்டிருப்பவர்களை யும் பிள்ளையவர்கள் ஊக்கி வரலானார். இதனை எடுத் துக் காட்டும் நிகழ்ச்சி ஒன்று இங்குக் காட்டத் தகும்.

நாகர்கோவில் கார்மல் ஆங்கில உயர்நிலைப்பள்ளி ஆசிரியரான மரிய ஜாண் காலிங்கராயர் என்பவரிடம் 'செண்பகராமன் பள்ளு' என்னும் ஏட்டுப் பிரதி யொன்று அகப்படலாயிற்று. இச்சுவடி கிடைக்கப் பெற்றதும், இவரும், *திரு. பி. ஜே. தாஸ் என்பவரும் இதனைக் கவிமணி யவர்களிடம் எடுத்துச் சென்று,

---

*இவர் இப்பொழுது திருவனந்தபுரம் அகில இந்திய வானொலி நிலையத்திற் சிறந்த பதவியில் இருந்து வருகின்றார்.

இந் நூலை வெளியிடுவதில் அன்னாரின் பேருதவியை நாடினார். பிள்ளையவர்கள் தம்மால் இயன்ற உதவியை அளிக்கத் தடையுமுண்டோ? எனவே, திரு. மரிய ஜாண் பாடல்களைப் படித்துக் காட்ட, கவிமணியும் கேட்டு மகிழலானார்.

இவ்வாறு நடைபெற்று வருங்கால், ஒருநாள் கவிமணியின் பேத்தி, குழந்தை வள்ளியம்மை, அவரின் பக்கத்தில் உட்கார்ந்திருந்தது. அக் குழந்தைக்கு ஐந்து ஆண்டுகளே நிரம்பியுள்ளன. திரு. மரிய ஜாண் பாடல்களைப் பாடிக் கொண்டிருக்கும் பொழுது, குழந்தை அப் பாடல்களின் இன்பத்தில் ஈடுபட்டு மகிழ்ச்சிப் பெருக்காற் சாய்ந்து ஆடியது. இந் நிகழ்ச்சியை உற்று நோக்கிய திரு. பி. ஜே. தாஸ், குழந்தை சாய்ந்து ஆடிய நிகழ்ச்சியை வைத்தே சாற்றுக் கவியொன்று தரல் வேண்டுமென்று கவிமணியவர்களிடம் வேண்டினார். கவிமணியும்,

> "வள்ளலுயர் தேன்கோவை மன்சேண் பகராமன்
> பள்ளினிமை யானும் பகருவதேன்?—தெள்ளமுதப்
> பாட்டிசைக்கோர் பச்சைப் பசலையுமே சாய்ந்தாடிக்
> காட்டியதா லுள்ளக் களிப்பு"

என்று பாடித் தந்தனர்.

## திறமைக்குப் பாராட்டு

கவிமணி, உள்ளதை உள்ளபடி கூறுகின்ற வன்மை படைத்தவர். அஞ்சி ஒதுங்கும் பேடித் தன்மையும், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பகரும் குறுகிய நோக்கமும் அவரிடம் காண இயலா.

ஒருவரின் திறமையைப் புகழ்வதிலோ, அன்றி அவரைப் பாராட்டுவதிலோ கவிமணி வெறுப்பவரும், தமது பெருமை குறைந்துவிடும் என்று நினைப்பவரும் அல்லர். தசாவதானி ஆறுமுகம் பிள்ளை அவர்களின் திறமையைப் புகழ்ந்து பாராட்டிய நிகழ்ச்சியை அடியிற் காண்க.

திருவாவடுதுறை ஆதீனப் புலவரும், சுசீந்திரத்தில் வதிந்து வருபவருமான தசாவதானி ஆறுமுகம் பிள்ளையவர்கள், திருவனந்தபுரத்தில் வைத்து உயர்திரு. சேஷையா அவர்கள் தலைமையில் தசாவதானம் நடத்திக் காட்டலானார். அப்பொழுது தலைவர், கவிமணியிடம் அவதானத்தைப் பற்றி அவரது கருத்தை விளம்புமாறு வேண்டினார். கவிமணியோ,

> "ஆறுமுகம் பிள்ளை அவதானம் கண்டேனியேன்
> வேறுமுக மன்கூற வேண்டுமோ? — தேறமதிச்
> சேஷையா மெச்சித் திருவாய் மலர்ந்தருளி
> பேஷையா வென்ற பிறகு"

என்று உவப்புடன் விடை நல்கினார்.

## உலக வழக்கு

கவிமணி, உலக வழக்கை நன்றாக அறிந்து, அதற்குத் தக்கவாறு ஒழுகுகின்றவர்; எவருக்கும் எப்பொழுதும் விருப்பக் குறைவை உண்டு பண்ணாதவர்; 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' என்பதனைத் தமது வாழ்க்கையில் கைக்கொண்டிருந்தவர். இதற்குச் சான்றாக ஈண்டு நிகழ்ச்சியொன்று எடுத்துக் காட்டப்படும்.

கவிமணி திருவனந்தபுரத்தில் தங்கியிருந்த பொழுது, திருமணஞ் செய்து கொண்ட மணமக்கள் அவரது இல்லத்திற்குப் புது விருந்தினராக வந்திருந்தனர். அன்று விருந்து நடைபெற்றுக் கொண்டிருக்கையில் தந்தி ஒன்று வந்தது. அதனைக் கண்ணுற்ற கவிமணி, அஃது ஓர் துக்கத் தந்தியாக இருக்குமென்று ஊகித்து அறிந்தார். மணமக்கள் விருந்திற்கு வந்திருக்கும் பொழுது, துக்கம் என்றால் அவர்கள் வருந்துவார்கள் அல்லவா? கவிமணியோ அவர்களுக்கு எவ்வகையிலும் வருத்தத்தைக் கொடுக்க விரும்பவில்லை. ஆகவே, அவர் தந்தியைப் பிரித்துப் பார்க்காது மறைத்து வைக்கலானார்.

கவிமணியின் இல்லக் கிழத்தியார், தந்தி வந்த செய்தியை அறிந்து, அதனைப் பிரித்துப் பார்க்க விழைந்தனர். ஆயினும், அவர் அதற்கு இணங்கவில்லை. விருந்து முடிவுற்றதும், மணமக்கள் தங்கள் இல்லத்திற்கு மகிழ்ந்து செல்லலாயினர். கவிமணி தந்தியை நோக்கினார். அஃது நாகர்கோவிலில் இருந்த அவரது உறவின் முறையார் ஒருவர் உயிர் நீத்த செய்தியைக் குறித்தது. உடனே அவர், துக்கத்தைக் கேட்டுவருமாறு, நாகர்கோவிலுக்குப் புறப்படலானார்.

## செய்ந்நன்றி மறவாமை

கவிமணி செய்ந்நன்றி மறவாப் பண்புடையவர். இராசா சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் தம்மை அழைத்துப் பொன்னாடை போர்த்தி மகிழ்வித்தமைக்கு மகிழ்ந்து பாடல்கள் பல இயற்றியுள்ளார். அவரது இனிய பண்புகளை யெல்லாம் அப்பாடல்

களிற் பாராட்டிப் பாடலானார். 'பூவாரம் தந்திடுவான்' என்றும், 'பொன்னாடை போர்த்திடுவான்' என்றும், 'நாவார நல்லுரையும் நல்கிடுவான்' என்றும் அவர் தமக்குச் செய்த சிறப்புக்களைக் கவிதையிலே போற்றுகின்றார். அவர் அமைத்த பல்கலைக் கழகத்தையும் சிறப்பித்துக் கூறுகின்றார். அண்ணாமலை மன்னர் அமைத்த பல்கலைக் கழகத்தைக் கண்டு களித்துத் 'தில்லைப் பதியுடையான் ஆடுகின்கிறான்' என்று அணிநலங் கனியைக் கவிமணியவர்கள் பாடியிருப்பது மிக்க வியப்பைத் தருவதாகும்.

"தில்லைப் பதியுடையான் சிற்றம் பலந்தன்னில்
அல்லும் பகலுநின் றாடுகின்றான் — எல்லைக்கண்
அண்ணா மலைமன் அமைத்த கலைக்கழகம்
கண்ணாரக் கண்டு களித்து."

அண்ணாமலைச் செட்டியார் விண்ணாடு சென்ற பொழுது அவரது மறைவுக்கு வருந்திப் பாடியிருப்பதும் கவிமணி அவரிடம் வைத்திருந்த அன்பையும், செய்ந் நன்றி மறவாத பண்பையும் தெள்ளிதிற் புலப்படுத்தும்.

"அன்பின் கடலை அமுத மொழியரசைத்
துன்பம் துடைத்தருளும் தோன்றலை—இன்பமெழப்
பொன்னாடை தேர்ந்தெனக்குப் போர்த்த பெருந்தகையை
எந்நாள்யான் காண்பேன் இனி!"

இவ்வாறே கவிமணியவர்கள் டாக்டர் ஆர். கே. சண்முகஞ் செட்டியார் அவர்களையும், வேறு பல அறிஞர்களையும் பாராட்டிப் பாடியுள்ளமையும்

அவரது நன்றி மறவாமையாகிய பண்பை நன்கு வெளிப்படுத்துவதாம்.

## கவியோகியைப் போற்றல்

கவியோகி சுத்தானந்த பாரதியார் அவர்களின் கவியமுதத்தைக் கவிமணி நன்கு பருகிக் களித்தவர். கவியோகி யவர்கள் இச் செந்தமிழ் நாட்டிற்கு ஆற்றி வரும் ஒப்புயர்வற்ற தொண்டையும் போற்றியவர். கவியோகியவர்களின் கவிதைகளால், உரைநடைகளால், நவீனங்களால், நாடகங்களால், மொழிபெயர்ப்புக்களால் தமிழகம் அடைந்துள்ள பயனையும் நன்கு அறிந்தவர். கவியோகி சுத்தானந்தர் அவர்களின் பாக்கள் மிக்க இனிமை வாய்ந்தவை என்பதும் அவர்களின் பாவிருந்தை உண்டு அறியாத மக்கள் இந் நாட்டில் இல்லை என்பதும் கவிமணியின் கருத்தாம்.

"கண்டுங் கரும்பும் கனியும் களியமுதும்
தண்டமிழில் கொண்டுதரும் தண்ணளியான்—மண்டுபுகழ்ப்
பண்டிதன்சுத் தானந்த பாரதிசெய் பாவிருந்தை
உண்டறியார் உண்டோ உரை!"

அழுக்காறற்ற ஒரு பெரியாரிடமே இத்தகைய பண்பாட்டைக் காண இயலும். ஆகவே, கவிமணி அழுக்காறற்ற தன்மையுடையவர் என்பது வெளிப்படும். அஃதுடன் அவர் கவியோகியை எவ்வாறு மதிக்கின்றார் என்பதையும் காணுங்கள்.

யோகி சுத்தானந்த பாரதியார் ஒருமுறை கவிமணியைக் காணுமாறு புத்தேரிக்குச் சென்றிருக்

தார். அப்பொழுது கவிமணி கவியோகியின் வருகைக்கு மகிழ்ந்து,

"சிந்தைகனிந் திந்தச் சிறுகுடிலில் காட்சிதர
வந்தருள்சுத் தானந்த மாமுனியே—வந்தனங்கள்
ஆயிரஞ் செய்தேன் அரிய தமிழ்த்தெய்வக்
கோயில்நீ என்றுளம் கொண்டு."

என்று உள்ளங் கனிந்து பாடியுள்ளார். கவியோகியைத் தெய்வத் தமிழ்க் கோவில் என்று மதிக்கின்ற அவரது தன்மையை என்னென்று புகல்வது? இத்தகைய சீரிய பண்பாடு அமைந்தவர் கவிமணி.

## குறையை நிறையாக் கோடல்

கவிமணியின் வாழ்க்கை, அன்பு, அருள், அடக்கம் ஒழுக்கம், நேர்மை, பண்பாடறிந்து ஒழுகல் முதலியன அமைந்து விளங்கிய சீரிய வாழ்க்கை; பிறரை ஊக்கல், அவர்களுக்கு உதவி புரிதல் முதலியன நிறைந்து விளங்கிய பிறவி நோக்க முணர்ந்த வாழ்க்கை; யாவரையும் ஒப்ப எண்ணி யொழுகும் உண்மை வாழ்க்கை; தன் உறுகிலை இழந்து உயிர்வாழத் துணியாத அற வாழ்க்கை; தன்னலம் பேணி இழி தொழில் புரியாத தூய வாழ்க்கை; உயிரினுஞ் சிறந்தது மானம் என்று கொண்ட விழுமிய வாழ்க்கை.

இத்துணைச் சீரிய வாழ்க்கையில் கவிமணி யவர்கட்கு நேர்ந்த குறையொன்று உண்டு. ஆனல் கவிமணி, அதனைக் குறையாக எண்ணி மனம் மாழ்கி நோகவில்லை. கல்வி, கேள்வி, பொன், மணி முதலிய எல்லாச் செல்வங்களையும் அவர் பெற்றிருந்தார்

எனினும், மழலைச் சொற் கேட்டு மகிழும் மாண்புறு மக்கட் செல்வம் அன்னார்க்கு வாய்க்கவில்லை. இது ஒன்றே கவிமணிக்கு ஏற்பட்ட பெருங் குறை. ஆயினும், கவிஞர் பெருமான் இதைக் குறித்து இரங்கிக் கழிந்தவர் அல்லர்.

கவிமணி தம்மிடம் பயின்ற மாணவ மாணவிகள் அனைவரையும் தமது குழந்தைகளாகவே கருதினர். "பெற்ற புதல்வர், புதல்வியர் ஒரு தந்தைக்குக் காட்டும் அன்பை விடவும் மேம்பட்ட அன்பை எனது மாணவ மாணவிகள் இன்றும் என்னிடம் காட்டுகின்றார்கள்; ஆகவே, எனக்கு மக்கட் செல்வம் இல்லையே என்ற கவலை இல்லை; எத்துணையோ குழந்தைகள் எனக்குக் கிடைத்திருக்கின்றார்கள் என்பதை நினைந்து நான் உவகை கொள்கின்றேன்" என்று புன்முறுவல் பூத்த முகத்தோடு கூறுவது அவரது இயல்பாகும்.

உண்மையில், கவிமணிக்கு மக்கட் செல்வம் இல்லை என்ற கவலையே உண்டாகக் காரணமில்லை. ஏனெனில், அவரது மருகர் திரு. கே. குமாரசாமிப் பிள்ளை யவர்கள் கவிமணிக்கு அன்புப் பணிவிடை புரிந்து வந்தார். அவரது பணிவிடை ஒப்பு உயர்வு அற்றது. கவிமணியும், மருகர்பால் தமக்குள்ள உண்மை அன்பிற்கு அறிகுயாக, தமது நூல்களின் உரிமைகளை அவருக்கே அளித்துள்ளார்.

**புலமையும், பண்பாடும் :**

கவிமணி மிக்க புலமை நிரம்பியவர் என்பது மட்டுமன்று; சிறந்த பண்பாடும் நிறைந்தவராவர்.

சிலர் நிரம்பிய புலமை சான்றவராக இருப்பர்; ஆயின் பண்பாடுகள் இரா. சிலரிடமோ பண்பாடுகள் சிறந்து விளங்கும்; ஆயின் தேர்ந்த புலமை இராது. கவிமணியோ எனில், அவ்வாறு இல்லை. அவர் நிரம்பிய புலமையும், சீரிய பண்பாடுகளும் பெற்றிருந்தார். புலமையும், பண்பாடும் ஒருங்கே சிறந்து விளங்கக் காண்பது அருமையாம். கவிமணியிடம் புலமையும், பண்பாடும் ஒருங்கே காணப்பெற்றமையின் அவர் சான்றோராகக் கருதப்பட்டார்—கருதப் படுகின்றார்.



---



